௨

கடவுள் துணை.

# செந்தமிழ்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதந்தோறும்வெளிவரும்

## ஒரு தமிழ்ப்பத்திரிகை

"எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும்"—திருவள்ளுவர்.

தொகுதி-௩௮.] விஷு ௵ ஐப்பசி ௴ [பகுதி-௧௨.
Vol. 38. October — November 1941. No. 12.

உள்ளுறை.



பத்திராசிரியர்—திரு. நாராயணையங்கார்.

வருஷம் ஒன்றுக்கு ரூ 4.] [தனிப்பிரதி அணா—8.
வெளிநாடுகளுக்கு ரூ 4—8—0.

1941.

Printed by Srimathu R. Shanmuga Rajeswara Naganatha Sethupathy Avl., and Published by Thiru. Narayana Iyengar at the Tamil Sangam Power Press, No. 54, Tamil Sangam Road, Madura.

## ஒரு வேண்டுகோள்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதமொருமுறை வெளிவரும் இச்செந்தமிழ்ப்பத்திரிகையில் வெளியிடுமாறு பொருளுரைகளும் மதிப்புரைவேண்டிப் புத்தகம் முதலியனவும் அனுப்புவோர் அவற்றைப் பத்திராசிரியர், செந்தமிழ், மதுரைத்தமிழ்ச்சங்கம், மதுரை என்று விலாசமிட்டும்,

செந்தமிழில் வெளியிடுமாறு அனுப்பும் விளம்பரங்களையும், பாண்டியன்புத்தகசாலைக்கு நன்கொடையாக அனுப்பும் புத்தகம் முதலியவைகளையும், செந்தமிழ் செந்தமிழ்ப்பிரசுரங்கள் தமிழ்ச்சங்கப் பிரசுரங்கள் சங்கக்கலாசாலை சங்கப்பரீக்ஷைகள் முதலியவை சம்பந்தமாக அனுப்பும் கடிதங்கள் மணியார்டர்கள் முதலியவற்றையும், இன்னும் இச்சங்கசம்பந்தமாயறியவிரும்பியெழுதும் பிறவற்றையும் மானேஜர், மதுரைத்தமிழ்ச்சங்கம், மதுரை என்று விலாசமிட்டும் அனுப்புமாறு இதன்மூலம் கேட்டுக்கொள்ளலாயிற்று.

லக்ஷ்மீநாராயணையர்,
மானேஜர்.

---

## மதுரைத்தமிழ்ச்சங்கத்தில் விற்கப்பெறும் புத்தகங்கள்.

### I. சங்கப்பிரசுரம்.

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1. | ஞானாமிர்த மூலமும் உரையும் ... ... | 1 | 0 | 0 |
| 2. | சைவமஞ்சரி ... ... ... | 1 | 8 | 0 |
| 3. | *யாப்பருங்கலவிருத்தி ... ... ... | | | |
| 4. | வைத்தியசாரசங்கிரகம் ... ... ... | 5 | 0 | 0 |
| 5. | பன்னூற்றிரட்டு ... ... ... | 3 | 0 | 0 |
| 6. | மகாபாரதம் அரும்பதவுரையுடன் ... ... | 4 | 0 | 0 |
| 7. | *தோத்திரத்திரட்டு ... ... ... | | | |
| 8. | *தமிழ்ச்சொல்லகராதி உயிர்வருக்கம் முடிய. முதற்பாகம். | 6 | 0 | 0 |
| | *ஷெ இரண்டாம்பாகம் ... ... ... | 4 | 8 | 0 |
| | ஷெ மூன்றாம்பாகம் ... ... ... | 5 | 0 | 0 |
| 9. | *அபிதானசிந்தாமணி ... ... ... | | | |
| 10. | தொல்காப்பியம் செய்யுளியல் (நச். உரை முதலிய) ... | 1 | 12 | 0 |
| 11. | திருவருணைக்கலம்பகம் ... ... ... | 0 | 6 | 0 |
| 12. | அமுதாம்பிகைபிள்ளைத்தமிழ் ... ... | 0 | 8 | 0 |
| 13. | கலைசைச்சிலேடைவெண்பா ... ... | 0 | 6 | 0 |
| 14. | *தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி ... | | | |
| 15. | திருவாரூர் நான்மணிமாலை ... ... | 0 | 4 | 0 |
| 16. | ஸ்ரீகிருஷ்ணசரித்திரவிமர்சம் ... ... | 1 | 4 | 0 |
| | பன்னூற்றிரட்டு (செலக்ஷன்) ... ... | 0 | 4 | 0 |
| | திருவாலவாய்த் திருநீற்றுப்பதிகம் முதலியன ... | 0 | 1 | 0 |

---

உ

## "செந்தமிழ்" நேயர்களுக்கு ஒரு வேண்டுகோள்.

இம் மதுரைத்தமிழ்ச்சங்கத்தாரால், சென்ற முப்பத்தேட்டுவருட காலமாகத் தமிழ்மொழியின்வளர்ச்சிகருதி மாதம் ஒருமுறை வெளியிடப்பெற்றுவரும் இச்"செந்தமிழ்"ப்பத்திரிகையானது, பல பண்டிதர்களாலும் எழுதிவரப்பெறும் அரியவிஷயங்களை எளிதில் எல்லோருமுணர வெளியிடும்பெருமைவாய்ந்ததென்பது யாவரும் அறிந்ததே. அது, செந்தமிழ்நேயர்களின் அபிமானத்தையும், பண்டிதர்களின் ஆதரவையுங்கொண்டே இப்பகுதியோடு முப்பத்தேட்டாந்தொகுதி முற்றுப்பெற்றிருக்கிறது. இனி, முப்பத்தொன்பதாந்தொகுதி தொடங்கப்பெற்று, அதன் முதற்பகுதி நாளிது விஷு ௵ கார்த்திகை௴ 29உ வெளிவரும். அப்பகுதி வழக்கப்படி அங்கத்தினர்களுக்கும், செந்தமிழ்ச் சந்தாதார்களுக்கும் அத்தொகுதியின் வருஷச்சந்தாவுக்கு வி. பி. தபாலில் அனுப்பப்பெறும். செந்தமிழபிமானிகள் வி. பி. யை அன்புடன் பெற்றுப் பத்திரிகையை ஆதரித்துவருவதோடு தங்கள் நண்பர்களையும் பத்திரிகையைத் தருவித்துப் படித்துவரும்படி தூண்டவும், பண்டிதர்கள் சிறந்த விஷயதானமளித்துச் செந்தமிழைச் சிறப்பித்து வரவும் வேண்டிக்கொள்ளப்பெறுகிறார்கள்.

N. B:— முப்பத்தொன்பதாந்தொகுதிச் சந்தாத்தொகையை மணியார்டர்மூலம் அனுப்பிப் பத்திரிகையைப் பெற்றுக்கொள்ள விரும்புவோர், நாளிது விஷு ௵ கார்த்திகை௴ 29உக்குள் இச் சங்கமாபீசிற்குக் கிடைக்கும்படி மணியார்டரை அனுப்பிவைத்தல் வேண்டும். அதற்குள் மணியார்டர் வராவிட்டால் முப்பத்தொன்பதாந்தொகுதியின் முதற்பகுதி வழக்கப்படி வி. பி. மூலம் அனுப்பப்பெறும். வி. பி. அனுப்பியபின்பு அதனை அங்கீகரிக்காது திருப்பியனுப்புவதால் சங்கத்துக்கு வீண்செலவு நேரிடுமாதலால் தயவுசெய்து வி. பி. யை அங்கீகரித்துச் செந்தமிழை ஆதரித்து வருமாறு கேட்டுக்கொள்ளுகிறோம்.

லக்ஷ்மீநாராயணையர்,

மானேஜர்.

---

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி-௩௮.] விஷு ஹூ ஐப்பசி மீ [பகுதி-௧௨.

Vol. 38. October—November 1941. No. 12.

## கம்பராமாயண சாரம்

[ராவ்சாகிப் ஸ்ரீ. வே. ப. சுப்பிரமணியமுதலியாரவர்கள், G.B.V.C.]

௬௫௬-ஆம் பக்கத் தொடர்ச்சி.

### மூலபலவதைப்படலம்.

இராவணனுடைய மூலப்படையையும் அவன் ஆணைப்படி பல திசைகளிலிருந்தும் பாதாளத்திலிருந்தும்வந்த படைகளையும் இராமன் ஏகனாய் வதைத்ததைக் கூறுவது. (பலம் - படை.)*

இராவணன், வெளியேயிருந்துவந்த படைகளையும் இலங்கையிலிருந்த மூலப்படையையும் இராமலக்ஷுமணர்மேலேவித் தான் வேறுபடைகளுடன் வானரப்படைமேற் செல்லல்.

இராவணன், (முன் 'அற்பமனிதருடனும் குரங்குகளுடனும் பொருதல் கவுரவக்குறைவென்று பொருதேனில்லை' என்றவன், இப்போது, விரைவாகக் காரியமாகவேண்டுமென்றுகருதி, அந்தக் கவுரவத்தைப் பாராட்டாதவனாகிச்) சேனாபதிகளைநோக்கி '("பகை வரை அழித்தல் எங்கள்கடன்" என்றீர்கள். அதில் நானும் ஒரு

* 'பலம் - சேனை; சேனைகள் - காட்டுப்படை, நாட்டுப்படை, துணைப் படை, பகைப்படை, மூலப்படை, கூலிப்படை என்று அறுவகைப்படும். இவற்றுள் மூலப்படையாவது-தொன்றுதொட்டுவருஞ் சேனை.' வை. மூ. கோ.

பங்கெடுத்துக்கொள்கிறேன்.) நான் ஒருபுறமாகப்போய் வானரப் படையை மாய்ப்பேன், நீங்கள் மற்றொருபுறமாகப்போய் மனித ரிருவரையும் வதையுங்கள்' என்றான். உடனே, அவர்கள், தே ரேறித் தங்கள் சேனைகளைச் சேர்ந்தார்கள். அதுகண்ட இராவணன், மூலப்படையை அவர்களுக்குமுந்திப் போர்க்களம் போய்ச்சேரச்செய்க' என்று கட்டளையிட்டுவிட்டுத் தேரேறிவேறு படைகளுடன் வானரசேனையோடு பொருதற்குப்போனான்.

## படைவீரரின் பான்மைகள்.

வள்ளுவர், யானைமேல் முரசேற்றியறைந்து, இலங்கைநக ரெங்குந் திரிந்து 'சேனைகள் எழுக' என்று கூவக்கேட்டுச் சாலப் பெரிய மூலப்படை கூடித் திரண்டது. அந்த மூலப்படைவீரர்கள், அறத்தை (அன்னமாக) உண்டு, அருளை (நீராக)க் குடித்துக் கொடுமையை (ஆபரணமாக) அணிந்து, பாவத்தை (மனைவியாக) மணஞ்செய்துகொண்ட மணவாளப்பெருமாள்கள்; (உடம்புபோல) உள்ளம் இருண்டவர்; சிவந்தநெருப்பினும் அதிகமாகச் சிவந்த செம்பட்டைமயிரினர்; (கொலைத்தொழிலில் தன்னினும் மிக்கவ ரென்று) எமனும் கொண்டாடத்தக்கவர்;* கடல்நீரைக் கையால்

---

* அறத்தைத் தின்றருங் கருணையைப் பருகிவே றமைந்த
மறத்தைப் பூண்டுவெம் பாவத்தை மணம்புணர் மணாளர்,
நிறத்துக் காரன்ன நெஞ்சினர் நெருப்புக்கு நெருப்பாய்ப்
புறத்துப் பொங்கிய பங்கியர் காலனும் புகழ்வார்.

பருகி - குடித்து. மறம் - கொடுமை. மணம்புணர்தல் - விவாகஞ்செய் தல். மணாளர் - மணவாளப்பிள்ளைகள் - மாப்பிள்ளைகள். நிறத்துக் கார் அன்ன நெஞ்சினர் - நிறத்தில் மேகம் ஒத்த (கருநிறமுடைய) மனமுடைய வர்கள். 'நெருப்புக்கு நெருப்பாய்' என்றது, நெருப்பினும் அதிகமாகச் சிவந்து என்றபடி. பொங்குதல் - மேலெழுதல். பங்கி - ஆண்மயிர். அறியா மையை இருளென்பது கவிமரபாதலால், 'நிறத்துக் கார் அன்ன நெஞ்சினர்' என்பதற்கு அறியாமைநிறைந்த மனத்தினர் என்றும் பொருள்கூறலாம்.

இருண்ட கடலுக்குள்ளேயுள்ள வடவாமுகாக்கினிபோல, இருண்ட நெஞ்சுக்குள்ளேயுள்ள கோபத்தீ, தனக்கு மேலான தீ (செம்பட்டைமயிர்) என்று சொல்லும்படி, மேல்நோக்கிச் சுவலித்தெழுந்தாற்போன்ற செம் பட்டைத்தலைமயிரினரென்று 'நெருப்புக்கு நெருப்பாய்ப் புறத்துப் பொங் கிய பங்கியர்' என்பதற்குப் பொருள்விரித்துரைத்தலுமாம்.

வாரி இறைத்துவிட்டு, மகரமீன்களை வாயிலிட்டுக்கொள்பவர்; தண்ணீர் கிடைக்கவில்லையானால், மேகத்தைப் பிழிந்து குடித்துத் தாகத்தைத் தணிப்பவர்; தங்கள் வேலின்கூர்மையை மந்தர முதலிய மலைகளையுருவச்செய்து சோதிப்பவர். (சிப்பிகொண்டு சொறிதல்போலச்) சந்திரனைக்கொண்டு சொறிந்து உடற்றினவைத் தீர்ப்பவர்; சூலமும் மழுவும் ஏந்துதலால் சிவனையும், வில்லும் வாளும் சக்கரமும் தண்டும் தாங்குதலால் திருமாலையும், வேல் பிடித்திருத்தலால் குமரனையும் போல்பவர்; ஒருலகத்தைவெல்லு தற்கு ஒருவரேபோதும். இருவர்சேர்ந்தால், ஏழுலகத்தையும் வென்றிடுவர்.

## சதுரங்கசேனைகளின் மிகுதி

அந்த மூலப்படையிலே, பிரமன்படைத்த பல அண்டங்களி லுள்ள மேகங்களெத்தனையோ அத்தனையென்னும்படி தேர்கள் எண்ணிறந்தனவாயிருந்தன. அவைபோல யானை குதிரை காலாட் களின் தொகைகளும் அளவிலடங்காதனவாயிருந்தன. தேர் யானை குதிரைகளின்மேலுள்ள தவிசுகளும் அந்தத் தேர்முதலியவற்றின் உறுப்புக்களும் பொன்கொண்டும் மணிகொண்டும் புனையப்பட் டிருந்தன. சேனை செல்லுதலாலுண்டாகிய செந்தூள் மேலே பரந்து கருமேகங்களைச் செம்மேகங்களாகச்செய்ய, யானைகளின் மதநீர் பெருகியோடிக் கலந்து கடல்நீரை உவர்நீக்கி நன்னீராக்கியது (என்றால், சேனைமிகுதி செப்புந்தரத்ததோ!) பண்டு உண்ட உலகங்களை உமிழ்ந்த திருமாலின் ஒருவாயை மூலப்படை வெளிப் பட்ட இலங்கைமதிற்கோபுரவாயில்கள் நான்கும் தனித்தனி நிகர்த் தன*

---

* 'ஒருவாயி லுண்டுமுன்ன ருமிழ்ந்தானை யுள்ளடக்கி யுலக மூன்றும்
திருவாயி லொருநான்கா லுண்டுமிழுந் திருக்கோயிற் செல்வங் கண்டான்'

எனத் திருக்குற்றாலத்தலபுராணத்திலே வருவதை இது நினைவுகூரச்செய் கின்றது.

ஒருவாயில் - ஒருவாயினால். 'உலக மூன்றும்' என்ற தொடர், அணிக ளுள்ளே இடைநிலைத்தீவக அணிக்கும், பொருள்கோள்களுள்ளே தாப் பிசைப்பொருள்கோளுக்கும் உதாரணமாக உள்ளது. அந்த 'உலகம் மூன் றும்' என்ற தொடருக்கு, அது திருமால்வாயைக் குறிக்குமிடத்து, 'மூன்று உலக உண்டைகள்' என்பதும், கோயில்வாயிலைக் குறிக்குமிடத்து(ச்

அந்த மூலப்படைப்பாரத்தை, ஆயிரம்படங்களும் தாங்க மாட்டாமையால், ஆதிசேடன் பதைபதைத்தான். பாற்கடலில் ஆலகாலவிடமெழக்கண்ட தேவர்கணம் சிதறியோடியதுபோல, அந்தக் கரும்படையைக் கண்ட குரங்குக்கூட்டம் பதறியோடி இலங்கையின் வடகரையை அடைந்தது. சக்கரவாளகிரி சுற்றிநிற்கும் வேலியாக, ஏழுகடற்கரைகளைக்கொண்ட இடம் வேட்டையாடும் காடாக, இராக்கதர் வேட்டையாடப்படும் மிருகங்களாகக் கூற்றும் விதியும் தீவினையும் வேட்டைக்காரராக, வேட்டையாடுதற்கு (இராக்கதவீரரான மிருகங்களை)ப் பின்தொடர்ந்துவந்தன.

### மூலப்படையைக் கண்டு அஞ்சிய தேவர்க்குச் சிவன் அபயங்கூறுதல்

தேவர்கள், பார்த்த பார்த்த இடமெல்லாம் வெற்றிடமின்றி மூலப்படை நெருங்கிநிற்பதைக் கண்டு, அஞ்சி, நடுங்கித் தாம்தவிர, உலகத்துயிர்களெல்லாம் அரக்கஉருக்கொண்டு போருக்குப் புறப்பட்டனவோ? ஏழுகடலும் இராக்கதவடிவங்கொண்டனவோ? என்று சந்தேகித்தார்கள். அவர்கள், (முன் தங்களைக் கொல்லுவதாக எழுந்த ஆலகாலவிடத்தையுண்டு தங்களைப் பாதுகாத்தாற் போல, இப்போதும் காப்பாற்றுவானென்று) அந்த நஞ்சுண்ட கண்டனையடைந்து 'இவர்கள் எங்கள் உயிர்களைப் பிடுங்கித் தின்றிடுவார்கள். இவ்வளவு உடல்பெருத்த தொகைமிகுத்த

---

சுவாமிதெரிசனஞ்செய்யவரும்) 'மூன்றுலோகத்துள்ள சிவபத்தர்கள்' என்பதும் பொருள். 'உண்டு உமிழ்தல்' என்ற தொடருக்கு(த் திருமால்) 'விழுங்கிக் கக்குதல்' என்பதும் (சுவாமிதெரிசனஞ்செய்வோர் கோயிலுக்கு) 'உள்ளேபோய் வெளியேவருதல்' என்பதும் பொருள்.

கோயிலின் ஒவ்வொருவாயிலுக்கும் வெளிப்படையாகத் திருமால் வாயையும் கோயிலுக்குக் குறிப்பாகத் திருமாலையும் உவமைகூறி, அக்காலத்தில் கோயிலின் மூலவிக்கிரகம் திருமால்விக்கிரகமாயிருந்ததுபற்றி, அந்தக் கோயில் மூன்றுலகத்தையும் தன்வயிற்றுள் அடங்கச்செய்த திருமாலை 'உள்ளடக்கித்' திருமாலினும் மிக்க பெருமையுடையதென்று ஊகித்துக் கொள்ளக்கூறிய கவிசாதுரியம் பாராட்டத்தக்கது.

இரண்டாம் அடியில் உவமேயமாகிய வாயில் என்பதில் உவமானமாகிய வாய் தொனித்தல் கவனிக்கத்தக்கது.

இராக்கதவருக்கம் இருக்கிறதென்று இதுவரையும் யாவர் அறிந்தார்? ஆயிரம் இராமர் ஒன்றுசேர்ந்து இரண்டு வியாழவட்டம்* பொருவாராலும்,இவர்களில் ஒருவரைக்கூடக் கொல்லமுடியாது. (இவர்கள் வெற்றிடமில்லாதபடி எங்கும் நிரம்பியிருக்கின்றார்களாதலால், இவரை எதிர்ப்பவர் நிற்பதற்கு இடமில்லை) நிற்பதற்கு இடம்பெற்றாலன்றோ, இவர்களைப் பொருதலும் கொல்லுதலும் கூடும்? (இடம்பெறுதல் கிடக்க:) இப்படையைப் (பார்ப்பவர் பயத்தால் உயிர்தாங்கியிருக்கமாட்டார்); பார்ப்பவர் உயிர்தாங்கியிருக்க முடிந்தாலன்றோ, எதிர்த்துப்பொருதல் இயலும்?' என்று அபயமிட்டு வணங்கினார்கள். சிவபிரான், 'நீங்கள் அஞ்சாதீர்கள். இந்தப் படைவீரரெல்லாரையும் இராமன் ஒருமிக்கக் கொன்றிடுவான். அவன் கொல்லுதற்கே, ஊழ் அவர்களை அவன்முன் கொண்டுவந்திருக்கிறது என்று கூறியருளினன்.

## மூலப்படையைக் கண்ட வானரர் ஓடுதல்

புற்றிலிருந்து புறப்பட்ட பாம்புகளைக்கண்ட எலிகள் பயந்தோடுதல்போல, இலங்கையிலிருந்து வெளியான இராக்கத மூலப்படையைக் கண்டு வானரப்படை நடுங்கி ஓடலுற்றது. வானரங்கள் ஒருசில, கடலணைமீதே சென்றன; வேறுசில, கடலைக்கடத்தற்குத் தெப்பங்கள் தேடின; மற்றுஞ்சில, (மிதவைவேண்டாமல்) நீந்திச்சென்றன. பிறசில, (நீந்தமாட்டாமல்) நீருள் அமிழ்ந்தன. பின்னுஞ்சில, (யாருங் காணாதிருக்கும்படி இலையடர்ந்த) மரக்கிளைகளில் ஏறின; இன்னுஞ்சில, மலைக்குகைகளுக்குள்ளே புகுந்தன. அணைவழியாகச் சென்ற குரங்குகள், 'நாம் தப்புதற்குதவிய அணைவழியேவந்து பகைப்படைகள் தொடராதபடி அதனை உடைத்திடுவோ'மென்று கூறிக்கொண்டன; '(உடைப்பதிற் பயனில்லை) அப்படைகள் ஆகாயவழியாக வரு'மென்று பயப்பட்டுக்கூறி (அணையை உடையாமல்) ஓடின.

## படைகளின்விவரத்தை இராமன் வினவ, விபீடணன் கூறுதல்

வானரசேனையில், சுக்கிரீவன் அனுமான் அங்கதன் ஆகிய மூவரே இராமனைவிட்டு நீங்காதுநின்றனர். மற்றையோரெல்லாம் ஓடிவிட்டதைக் கண்டு, இராமன் (விபீடணா! போர்செய்யாமல் தம்

* ஒரு வியாழவட்டம் - பன்னிரண்டுவருடகாலம்.

தோற்றமாத்திரத்தாலேயே நம் படைவீரர்களைப் பயங்தோடச் செய்த படை இப்பக்கத்துப்படையென்று தெரிகின்றேன். இதற்குப் பின்னாக வருகின்ற) அந்தக் கொடிய படைகள், எவ் விடத்தன? சொல்வாயாக,' என வினவ, 'அந்தப்படைகள் இராவண ணுணைப்படி தூதர்கள் சென்று அழைக்கப்பட்டு, எட்டுத்திக்குக்க ளன்றிப் பாதாளத்திலிருந்தும் வந்தன. அவற்றுக்கு முன்வரும் பெரும்படை, தொன்றுதொட்டுள்ள மூலப்படை. (இந்த மூலப் படையும் இதற்குப் பின்வரும் அந்தப்படையும் சேர்ந்த) மொத்தப் படை, தீவினை பின்னேநின்று (பிடரியைப்பிடித்துத்தள்ளி) முடுக்க இந்த அண்டத்திலே இராக்கதரென்று பெயர்படைத்த (வீரர்) எல்லாரும் (ஒருங்குதிரண்டு போர்புரிதற்கு) மூண்டுவந்த(வர்கள் அடங்கிய)தாம். வலிமையுடைய ஊழ் தூண்டுதல் காரணமாக, (மேற்கூறிய தீவினைப்பயனாக, எல்லாப்படைகளும்) மாண்டுவிடு மென்று என் புத்திக்குத் தோன்றுகின்றது' என்று விபீட்ணன் கூறினான்.*

## இராமன் ஏவ, அங்கதன் சென்று ஓடியசேனையைத் திரும்பச்சொல்லுதல்

இராமன், 'அங்கதா! ஓடியசேனையைத் திருப்பிக்கொண்டுவா' என, அவன்சென்று, 'சிதறியோடுபவர்களே! நான் சொல்வதைக் கேட்டுவிட்டுப்போங்கள்' எனக் குரங்குக்கூட்டம், 'கேட்கமாட் டோம்' என்றது. ஆயினும், சேனைத்தலைவர்கள், அவன் சொல்வ தைக் கேட்கத் திரும்பினார்கள். அங்கதன், திரும்பித் தன்னை நோக்கிநின்றவர்களைநோக்கி, 'ஓடின காரணம் யாது?' என்றான்.

## சேனைத்தலைவர் செப்புதல்

சேனைத்தலைவர்கள், மறுமொழிகூறுவாராய், 'அங்கதா! நீ, இப்போது வந்திருக்கிறவர்களைப் பார்த்திலைபோலும்! இந்திரசித்து என்ற ஒருவன் செய்தபோரில் நாம் பட்ட பாடுகளை மறந்து

---

* 'ஈண்டிவ் வண்டத்தில் இராக்கத ரெனும்பெய ரெல்லாம்
மூண்டுவந்தது, தீவினை பின்னின்று முடுக்க,
மாண்டு வீழுமின் றென்கின்ற தென்மதி வலியூழ்
தூண்டுகின்றதென் றடிமலர் தொழுதவன் சொன்னான்'

ஈண்டு - இங்கு. வலியூழ் - வலிமையுடைய விதி.

விட்டாயோ! இவர்கள் ஒவ்வொருவரும் அந்த இந்திரசித்தை ஒத்தவர். இருவர் விற்பிடித்து எய்து இவர்களில் எத்தனைபேரைக் கொல்லமாட்டுவர்? (ஒருவன்தப்பினாலும் நம்மையெல்லாம் கொன்றுவிடுவானே.) திரிமூர்த்திகள் முதலியோர் இவர்களை வெல்ல வல்லமையின்றி (இவர்களுக்குப் பயந்து) ஒளிந்து அடங்கியிருக்கின்றார்கள். இப்படிப்பட்ட அரக்கரை வெல்பவர், குரங்குகளை உதவியாகக்கொண்டு போர்செய்யும் மனிதரோ! சிவனும் விட்டுணுவும் பிரமனும் இந்திரனும் ஒன்றுசேர்ந்து ஆயிரங்கோடி ஊழிகாலம் போர்செய்து தம் தோள்வலிமையால் இவர்களில் ஒருவனை வெல்லவல்லரேல், நன்றேயாம். (அப்படியிருக்க, இரு மனிதரோ இவர்களெல்லாரையும் கொல்வார்!) குரங்குச்சேனை எழுபதுவெள்ளமும் இவர்களில் ஒருவனுக்குத் தின்னப்பற்றுமோ? யாங்கள் இராவணனுக்கு ஒருபதுதலையும் இருபதுகையும் இருப்பதுகருதித் தளர்கின்ற மனமுடையராயிருக்கின்றேம். இவர்களிற் பலர், ஓராயிரந்தலையும் ஈராயிரங்கையும் உடையராய்க் கடற்கரைமணலினும் மிகைப்படுதொகையுடையராயிருக்கின்றார்கள். (இவர்களைக் கண்டு எங்கள் மனம் தளர்வது இயல்பேயன்றோ?')

187 அனும னாற்றலு மரசன தாற்றலு[1] மிருவர்
தனுவி னாற்றலுந் தம்முயிர் தாங்கவுஞ் சாலா[2]
கனியுங் காய்களு முணவுள[3] முழையுள காக்க
மனித ராளினென் னிராக்கத[4] னாளினென்[5] வையம்.

கொண்டுகூட்டு: 'அனுமனாற்றலும் அரசனது ஆற்றலும் இருவர் தனுவின் ஆற்றலும், தம் உயிர் தாங்கவும் சாலா. உ(ண்)ணக் கனியும் காய்களும் உ(ள்)ள(ன). காக்க, முழை உ(ள்)ள(ன). வையம் மனிதர் ஆளின் என்? இராக்கதன் ஆளின் என்?'

பொருள்: 'அனுமன்வல்லமையும் சுக்கிரீவன் வலிமையும் இராமலக்குமணர் வில்வன்மையும் தங்கள் தங்கள் உயிரைக் காப்பதற்கே போதா. (அப்படியிருக்க, அவர்கள் எங்களைக் காக்க முடியாதென்பது கூறவேண்டியதில்லை. கிட்கிந்தமலையிலே, நாங்கள்) உண்ணுதற்குக் காய்கனிகள் உள்ளன. (எதிரிகள் கொல்லாதபடி) ஒளித்தற்குக் குகைகள் உள்ளன. (நாங்கள் அங்கேபோய்ப் பிழைத்திருக்கும்படி. எங்களை விட்டுவிடு.) பூமியை இராமலக்குமணர்

ஆண்டாலென்ன ? இராவணன் ஆண்டாலென்ன ? (நாங்கள் மனித ரல்லேம், இராக்கதருமல்லேம். எங்களுக்கு இருதிறத்தாராட்சியும் ஒன்றே. அப்படியிருக்க, எப்படியோ, ஒருதிறத்தார்க்காக நாங்கள் உயிரைக்கொடுக்கவேண்டுமென்று உரைக்கின்ருய்')

ஆற்றல் - வல்லமை. தனு - வில். சாலா - போதா. உண - உண்ண. உள - இருக்கின்றன. கரக்க - ஒளிக்க. வையம் - பூமி.

' "இராமனுண்டாலென்ன, இராவணனுண்டாலென்ன" என்ற பழமொழி, இந்தச்செய்யுளின் ஈற்றடியாற் கூறப்பட்டதாகும். ஆகவே, இச்செய்யுள்—உலகவழக்குநவிற்சியணியாம்.' வை. மு. கோ.

பாடபேதம்: [1] அரசன்றனுற்றலும், அரசன்ருனுற்றலும், [2] எங்களையின்னுயிர் தாங்கா, தங்களைத் தாங்குவார் தாங்கார், தங்கடமுயிரினைத் தாங்கா. [3] கானுள. [4] இராக்கதர். [5] ஆள்கிலென்.

188 தாழ ளாரன்றே புகழினைத்[1] திருவொடுந் தரிப்பார்[2]
யாழ ளேமெனி னெங்கிளை[3] யுள்ளதெம் பெரும[4]
பேர்மி னீர்[5]ரென்று விடைதரத்[6] தக்கனை[7] புரப்போய்[8]
சாமி[9] னீரென்றல் தருமமன்[10] றென்றனர் தளர்ந்தார்.

கொண்டுகூட்டு: 'எம்பெரும! தாம் உ(ள்)ளாரன்றே, புகழினைத் திருவொடும் தரிப்பார்? யாம் உளேமெனின், எம்கிளை உள்ளது, புரப்போய்! "போமின் நீர்" என்று விடைதரத்தக்கனை. "சாமின் நீர்" என்றல், தருமமன்று' என்றனர் தளர்ந்தார்.

பொருள்: 'எம்பெருமானே! (சுவரில்லாமற் சித்திரமெழுத முடியுமோ?) ஒருவர், தாம் உயிரோடுள்ளாராயிருந்தாலன்றோ, புகழையும் செல்வத்தையும் தாங்குவார் (ஆதல்கூடும்)? யாங்கள் உயிரோடிருந்தோமென்ருல், (எங்கள் மனைவியர் மக்கள்) சுற்றத்தார் (எல்லாரும் எங்களாற் பாதுகாக்கப்பட்டு உயிரொடு) இருப்பார்கள். (நீ இளவரசனைய் எங்களைக்) காத்தற்குரியையாய்ப் "பிழைத்துப்போங்கள்" என்று அனுமதிகொடுத்தற்பாலையாய் இருக்கின்ருய். (அப்படிப்பட்ட நீ,) "செத்துப்போங்கள்" என்று செப்புதல் தருமமன்று' என்று மனந்தளர்ந்துகூறினுர்கள்.

கிளை - சுற்றம். பெருமன் - தலைவன். 'இத்தேவர்க்கெல்லாம் பெருமன்' (பாரத. திரௌபதிமாலை. அசு. தமிழ்ச்சொல்லகராதி.) போமின் - போங்கள். விடைதரல் - விடைகொடுத்தல் - அநுமதிகொடுத்தல் (தமிழகராதி). புரத்தல் - காத்தல். சாமின் - சாங்கள்.

பாடபேதம்: [1] சேமுளாரலரேபுகழ், தாமுளராவரேபுகழ். [2] திரிப்பார். [3] எங்ஙனம். [4] பெருமான். [5] போமுனீர், போமுளீர். [6] விரைதரத். [7] தக்கன. [8] புகழோய். [9] சாமுன். [10] தருமமோ.

## அங்கதன் சாம்பவானைநோக்கி ஓடலாகாதென உரைத்தல்

(இராமன்சேனையில் எல்லாரினும் இளையோனான) அங்கதன், (அந்தச்சேனையிலேயன்றி இந்த உலகத்திலேயே எல்லாருக்கும் மூத்தோனான) சாம்பவான்முகத்தைப்பார்த்து, 'அறிவொழுக்கங்களால்நிறைந்த பெரியோனே! முன்னாளிலே எங்களுக்குத் 'திருமாலே சிராமனாக அவதரித்திருக்கிறான்' என்று தெரிவித்துத் தேற்றினையல்லையோ! அந்த நீதானே, இப்போது, இந்தத் தெளிவில்லாத வானரரைத் தேற்றி ஆற்றுவாயல்லையாய் அஞ்சினாய்! (ஆண்டினும் அறிவினும் முதிர்ந்த நீயே புகழையும் புலமையையும் போற்றாமல்) உயிரைப்போற்றுவானானையென்றால், உலகத்திலே புகழென்பது என்னாகும்!! படைத்தலைமையை மேற்கொண்டவர், கூற்றுவன் வாய்ப்பட்டாலும் வீரங்குறைவரோ!!!. நாம் அஞ்சினோம். (அஞ்சினமையால்) பழிபூண்டோம். இப்போர்க்களத்தைவிட்டு எங்கே சென்றாலும் அங்கே என்றும் சாவாமலிருக்கமுடியுமோ? நம்மைத் தஞ்சமென்றுநம்பிச் சேர்ந்த இராமலக்குமணரை நாம் கைவிடுவோமானால், அவர்கள் அமிர்தமென்று வாயிலிட்ட நஞ்சாவோமன்றோ? அவர்களைத் தனியாக விட்டுவிட்டுப்போதலினும் நாம் சாதலே நன்று'.

'திருமாலும் தேவர்களும் அசுரர்களும் சேர்ந்து கடைய மாட்டாத கடலைத் தானொருவனே தனியனாய்க் கடைந்த வாலி ஒரே ராமபாணத்தால் உயிரொழிந்ததை நீ மறந்தது எதனாலோ? அந்தப் பாணத்தால் அக்கினிபற்றிக்கொள்ள, அலைகடல்பட்ட பாட்டை அறியாய்போலும்! இராக்கதர்தொகையினும் வடிவினும் எவ்வளவு மிக்கவரானாலும், அவர்களிடத்தே தருமமென்பது சற்றும் இல்லையல்லவா. (அதனால் அவர்கள் அழிதல் திண்ணம்) தருமத்தைப் பாவம் வெல்லாது. வானாருடன் நீயும் இராமனுள்ள இடத்தைவிட்டு நீங்கியது உன் அறிவுக்கு அடாதது' என்றான்.

### சாம்பவான் சாற்றுதல்

அங்கதன்கூறியதைக்கேட்டுச் சாம்பவான், சற்றுநேரம் நாணத்தால் மனம்வாடியிருந்து பின்பு கூறுகின்றான். 'இப்போது வந்த பிரமாண்டமானபடையைக் காணுதலாவது, (கண்டபின் அஞ்சியோடாமல்) நிற்குதலாவது, ஆலகாலவிடத்தையுண்ட சங்காரமூர்த்திக்குத்தான் சாத்தியமோ? அப்படிப்பட்ட படையைக் கண்டு, அஞ்சிக் கூனற்குரங்குகள் ஓடிப்போனது குற்றமாமோ? ஆதிகாலத்திலே அமரரும் அசுரரும் பொருததைப் பார்த்திருக்கிறேன். அதிபூர்வீகரான மாலி, மாலியவான், காலகேயன், இரணியன், மது, கயிடவன் ஆகிய இவர்களையெல்லாம் பார்த்திருக்கிறேன். இவர்கள் யாருக்கும் இப்போது போர்க்களத்துக்கு வந்திருக்கிற இராக்கதருக்குள்ள பெருவலி கிடையாது. இப்படிப்பட்ட வலிமையோடு இந்த இராக்கதர்கள், வரங்களும் மாயங்களும் உடையவராய் எண்ணிறந்தவராயிருக்கிறார்கள். ஆயினும், இவர்களோடு போர்புரிந்து சாகாமல், புறங்காட்டியோடியது சந்தேகமின்றிப் பழிப்புக்கிடமானதே. நாங்கள் திரும்பிவருகிறோம். ஆனால், ஒன்று கூறவேண்டியதுண்டு. அது, இப்படி ஓடிய நாங்கள் எப்படி இராமன்கண்ணில்விழிப்பது? என்பதே' என்றான் (சாம்பவான்),

### சாம்பவானுக்கு அங்கதன் சமாதானங்கூறுதல்

வெள்ளிமலைமேல் நீலமேகம் மேவினாற்போல வெள்ளையானை மீதுவிளங்கும் நீலநிறமுடைய இந்திரனுடைய குமாரனை வாலியின்மகன் அங்கதன், கூறுகின்றான்:—

'வீரவாழ்க்கையை மேற்கொண்டவர்களுக்கு வெல்லுதலும் வெல்லப்படுதலும், கொல்லுதலும் கொல்லப்படுதலும் இயல்பாக ஏற்பட்டவை. ஆதலால், நீ, சிறிதும் அஞ்சவேண்டியதில்லை. நாமெல்லாரும் ஒருமித்துச்சென்றுநின்றாலும், ஒன்றும் செய்யவல்லேமல்லேம். இராமபிரானே பகைவரை எதிர்த்துப் பொருது வெல்வா

ஞனல், நாம் வெற்றியடைவோம், அன்றெனில், அவனேடு இறப்போம். அவனைத் தனியேவிட்டுப்போதல் புகழன்று' என்று சொன்னுன்.*

## சேனைகள் திரும்புதல்

சாம்பவான் 'நாம் ஓடிவந்தது பழிப்பானது. திரும்பிப் போவோம்' என, எல்லாரும், திரும்பி, அங்கதன்பின்னேசென்று, இராமனிருக்குமிடத்தை அடைந்தார்கள்.

## இராமன் இலக்குமணனைநோக்கிக் கூறுதல்

(பயந்த வானரசேனை, தைரியமடையும்படி) இராமன் இலக்குமணனைநோக்கி, 'என்னை எதிர்ப்போர் அரக்கராயினும் அசுரராயினும் அவர்கள் எவ்வளவு பெருந்தொகையினராயினும், நான் வில்லெடுத்தால், பெருநெருப்பில்விழுந்த பஞ்சுபோல அழிந்திடுவாரென்பதை நீ அறிவாயல்லவா; (முன்னுளில், நீ காணக் கான் படையை நான் ஒருவனே தனியனுய்ச் சேனையும் சேனுபதியுமாகித் தாக்கி அழித்ததுபோல,) இந்தப் பெரும்படையை நான் தாக்கித் தலைகளையெல்லாம் தறித்துத்தள்ளும்வரையும், இந்த வானரப்படையைப் பாதுகாப்பாயாக. இப்புறம் இந்தச்சேனைகளை யனுப்பிய தீய இராவணன், வேறொருபுறமாகவந்து நம் படையை மாய்த்துவிடலாகாதென்று என்மனம் வருந்துகின்றது. அநுமானும் நீயும் சுக்கிரீவனும் சேனைகாவல்செய்யுங்கள். என் தனிமைபற்றி மனந்தளர்வீராயின், போரில் தோல்வியடைவோம்' என்ருன். இலக்குமணன் 'அதுவே செய்யத்தக்கது. நீ எதிர்க்கும்படை

---

* 'ஒன்றும்நீ அஞ்சல் ஐய, யாமெலாம் ஒருங்கே சென்று
நின்றும்,ஒன் றியற்ற லாற்றேம் நேமியான் ருனே நேர்ந்து
கொன்றுபோர் கடக்கு மாயிற் கொள்ளுதும் வெற்றி அன்றேல்
பொன்றுதும் அவனே' டென்ருன் 'போதலோ புகழன்' றென்ருன்.

ஒன்றும் - சிறிதும். அஞ்சல் - அஞ்சாதிருப்பாயாக. ஒருங்கே - ஒருசேர. இயற்றலாற்றேம் - செய்யமாட்டேம். நேமியான் - சக்கராயுதத்தையுடையவன் (ஆன திருமாலின் அமிசமான இராமன்). நேர்ந்து - எதிர்த்து. கடத்தல் - வெல்லுதல் (தமிழகராதி). வென்றி - வெற்றி. பொன்றுதும் - சாவோம்.

இத்தனை பேரளவும் பெருவலியும் படைத்ததாயிருக்கும்போது, (தாம் ஒன்றுஞ்செய்யமாட்டாதவராய்த்) தலைமேலே தூக்கிக்கூப்பிய கையினராய் உன் வில்லாற்றலை வியந்துகாணும் விண்ணோர்போல, நாங்களும் தூரத்தேநின்று காணுதலைவிட்டு, உன் அருகேநின்று என்னஉதவி செய்யமாட்டுவேம்' என்றுகூறி (இலக்குமணன் சேனையைக்காத்தற்கு)ச் செல்லத்தொடங்கினன்.

அநுமான் முதலியோரை இலக்குமணனுக்குத் துணையாகநிற்கும்படி இராமன் கூறுதல்

அப்போது, அநுமான், இராமனைத்தொழுது! 'சுவாமீ! அடியேன்தோள்மேலிருந்து போர்புரிதல் நன்றென்று கருதுகின்றேன். அது திருவுளமன்றாயின், நாயேன் உன்பின்னேநிற்பது அடிமைத்தன்மைக்குத் தவறுகுமாறில்லை.' என்று கூற, இராமன், 'உன்னாலாகாததொன்றுமில்லை. இராவணன் எதிர்ப்பானானல், இலக்குமணன், உன் உதவியிருந்தால், பெருவெற்றிபெறுவான். அவன் இந்திரசித்தை வென்றது உன் உதவியினாலன்றோ? அவனை நீ பிரியாதிருந்தால், அவன் வெற்றிபெற்றிடல் நிச்சயம். ஆதலால், நீ அவனையும் சுக்கிரீவராசனையும் வானரசேனையையும் காப்பாயாக' என, அநுமான், மறுத்துக்கூறமாட்டானாய், இலக்குமணன் பின்னே சென்றான். பின்பு, இராமன், விபீடணனைநோக்கி, 'நீயும் உன்தம்பி*யுடன்சென்று அவனுக்கு அப்போதப்போது மாற்றார் மாயங்களைத் தேர்ந்தறிந்து தெரிவித்துச் சேனையைக் காப்பாயாக' என்று செப்பினான். இலக்குமணனோடு, அநும விபீடண அங்கத சுக்கிரீவர் சேனையைக் காத்துநின்றார்கள்.

இராமன் மூலச்சேனைமுன் செல்லுதல்

இராமன், கோதண்டத்தைக் கும்பிட்டெடுத்து, நாணேற்றி(க் கவசம்வேண்டாதபடி) மேருமலைபோல வலிமைமிகுந்த மார்பிலே கவசம்பூட்டிச் சொல்லச்சொல்லத் தொலையாத வேதவாக்கியங்கள் போல எடுக்கஎடுக்கக் குறையாத பாணங்கள்நிறைந்த அம்புப் புட்டிலை முதுகிலே தூக்கி, யுத்தசன்னத்தனாய், மூலப்படையின்

---

* இராமன் 'தன் அருமைத்தம்பியை அவன் (விபீடணன்) தம்பியாக்கிய பேரன்பையும் அபேதபுத்தியையும் விபீஷணன் எப்படி மறக்கமுடியும்?' கம்பசித்திரம்.

முன்னணிக்குமுன் சென்றான். அந்தப் படைவீரர்கள், அவன் தப்பிப்போக வழியில்லாதபடி வளைந்து வீசின அம்புகளும் படைக் கலங்களும் மொய்க்கக்கண்ட தேவருடம்புகள், நடுங்கின. அவர்கள் இராமனைத் (தியானித்து) 'கண்ணனே! கடல்வண்ணனே! எங்கள் கவசமே! தருமத்தின்வாழ்வே! மறையோர்வலியே! நீ ஒருவனல்லாமல் வேறு யாரும் தனியராய் இப்படையை எதிர்த்தல் இயலுமோ! எங்கள் எண்ணத்தை (இராட்சசசங்காரத்தை) நிறைவேற்றுவாயாக' என்று துதித்தார்கள்.* தருமபரிபூரணரான முனிவர்முதலியோர், இராமன்தனிமையையும் சேனைப்பெருமையையும் கண்டு (திகைத்துப் பயந்து மனவருத்தம்) தாங்கமாட்டாதவராய்க் கண்ணீர்துளிப்பவராய், நெஞ்சுபொருமிப் பதைப்பவராய்ப் 'பாவிகளெல்லாரும் தோற்றிடுக. தருமமூர்த்தி வென்றிடுக' என்று (இராக்கதரைச் சபித்து இராமனை) வாழ்த்தினார்கள்.†

ஏகனாய் எதிர்ந்த இராமனை இராக்கதர் மெச்சுதல்

'இந்த வீரன், தன்சேனை (நம்மைக் கண்டமாத்திரத்திலே) பயந்து பதறியோடிவிட, ஒருவர்துணையுமில்லாமல் இந்த வித்தாரமான சேனையைக் கண்டு சிறிதும் அஞ்சாமல் யாதொரு தடுமாற்றமுமின்றி எதிர்த்துவருகின்றசெய்கை, வெற்றியிலும் மேம்பாடுடையது. (இத்தகைய துணிவுடையான்தோல்வியும் வெற்றி

---

* 'கண்ணனே, எளியேம் இட்ட கவசமே, கடலே அன்ன
வண்ணனே, அறத்தின் வாழ்வே, மறையவர் வலியே, மாறா
தொண்ணுமே நீஅலாதோர் ஒருவர்க்கிப் படைமே லூன்றல்!
எண்ணமே முடித்தி' என்னா ஏத்தினர் இமையோ ரெல்லாம்.

கண்ணன் - திருமால். மாறுதல் - பின்வாங்குதல்;—முதுகிடுதல் (தமிழகராதி). ஒண்ணுதல் - இயலுதல். மேலூன்றல் - எதிர்த்துநிற்குதல். முடித்தி - முடிப்பாய் - நிறைவேற்றுவாய்.

† முனிவரே முதல்வ ராய அறத்துறை முற்றி னோர்கள்,
தனிமையும் அரக்கர் தானைப் பெருமையும் தரிக்க லாற்றார்,
பனிவரு கண்ணர், விம்மிப் பதைக்கின்ற நெஞ்சர், பாவத்
தனைவரும் தோற்க, அண்ணல் வெல்க'என் றாசி சொன்னார்.

அறத்துறை - தருமமார்க்கம். முற்றினோர் - நிரம்பினோர்கள். தானை - சேனை. தரிக்கலாற்றார் - பொறுக்கமாட்டார். பனி - நீர்த்துளி. அண்ணல் - பெரியோன். ஆசிசொல்லல் - வாழ்த்தல்.

யின்பாற்படும்.) முன்னாளில், முப்புரத்தையெரித்த சிவனும் நம்மை நாசமாக்கிய திருமாலும் முறையே பூமித்தேரையும் கருடனையும் ஊர்தியாகக்கொண்டு பொருதார்கள். இவனோ, ஊர்தியென்ப தொன்றும் இன்றி(த் தன்காலே தனக்கு வாகனமாக)ப் பாதசாரியாய்ப் போர்புரியவந்திருக்கின்றான். தேர்ப்படை, யானைப்படை, குதிரைப்படை, சிங்கப்படை, யாளிப்படை ஆதியாக, மேருப் போன்ற (மிகப்பெரிய) தேகமுடைய காலாள்வீரர்கள் (முடிவாக) உள்ள (இந்தச் சேனைக்) கடல்கள், ஏழுகடல்களினும் பெரியவை. இந்த மாபெருஞ்சேனைகளிலுள்ள தேர்வீரர் முதலிய வீரர்களைப் (போருக்கு) 'வாருங்கள், வாருங்கள்' என்று (அறைகூவி) அழைக்கின்ற (இந்த) மனிதனுக்கு இந்தப்போர்க்களத்தைவிட்டு(த் தப்பிப்) போகுமாறும் நம்மிடத்து அகப்பட்டு (நம்மாற் கொல்லப்படாமல்) பிழைக்குமாறும் எவ்வாறு?'* என்று இராக்கதர் தம்முள்ளே கூறிக்கொண்டார்கள்.

## இராமன் வில்நாணைத் தெறித்தல்

ஒரு சிங்கத்தைப் பல யானைகள் வளைந்துகொண்டாற்போல, இராமனை இராக்கதர்சூழ்ந்தபோது, அவன் தன் வில்நாணைத் தெறித்தான். அந்த நாணொலிகேட்டு, யானைகள் மதமும் கோபமும் மாறின; வீரர் வாய்புலர்ந்தனர்; குதிரைகள் வேகம் ஒடுங்கின. யானைகளும் குதிரைகளும் வெருண்டு கலைந்து பாகர்கள் சாகவும் தேர்கள் முறியவும் செய்யச் சேனையிலே பெருங்கலக்கம் பிறந்தது. இந்த நிகழ்ச்சிகள் இராக்கதர்தோற்பதை முன்னறிவிக்கும் துன்னிமித்தங்களென்று தேவர்கள் களித்துக் குதித்தார்கள்.

---

*தேரும் மாவும் யானை யோடு சீயம் யாளி யாதியா
மேரு மானும் மெய்யர் நின்ற வேலை யேழின் மேலவால்
'வாரும் வாரும்' என்ற ழைக்கும் மானி டற்கிம் மண்ணிடைப்
பேரு மாறும் நம்மி டைப்பி ழைக்கு மாறு மெங்ஙனே.

சீயம் - சிங்கம். யாளி - யானைத்தந்தமும் துதிக்கையும் சிங்கமுகமும் உடைய மிருகம் (தமிழகராதி). மானும் - நேரும். மெய்யர் - உடம்புடையார். வேலை - கடல். எங்ஙனே - எவ்வாறு.

## இராமன் அம்பெய்தல்

அப்போது, காலாள்களின்மேலும் யானைகள்மேலும் (தேர்களிற்பூட்டிய) பேய்கள்மேலும் (தேர்களை ஓட்டுகின்ற) வீரர்கள் மேலும் அவர்கள் (ஓட்டிய) தேர்கள்மேலும் (வீசிய) வாள்களின் மேலும் (எய்த) அம்புகள்மேலும் (அந்த அம்புகளைச் செலுத்திய) விற்களின்மேலும், (சேனைகளின் புடைபெயர்ச்சியால் போர்க்களத்துத்) தரையினின்று கிளம்பிய (மனத்தினுலும் கணக்கிடமுடியாத) தூளிகளிலும் மிக அதிகமாக வாளிகளைத் தூவினுன், வீரராமன்.*

## இராமபாணங்களால் இராக்கதசேனை பட்டவகை

நாற்புறத்தும் கடுங்காற்றுச் சுழன்றுவீச மேகங்கள்பொழிந்த கோடைமழைபோல, இராமபாணங்கள் மிகுதியாக எய்யப்பட்டவைகளால், தேர்ப்படையும் யானைப்படையும் குதிரைப்படையும் காலாட்படையும் அழிந்தன. (இராமனைக் கோபித்து) விழித்த கண்களும் (தாக்க ஓங்கிய) கைகளும் (மேல்விழுந்து அமுக்க முயன்ற) உடல்களும் பழித்த வாய்களும் (கிட்டித் தாக்குதற்கு எட்டிச்சென்ற) கால்களும் (மோதித் தாக்கமுயன்ற) தோள்களும் அளவிறந்த ராமபாணங்களால் அழிந்தன. அவர்கள் எய்த அம்புகளும் வீசிய ஆயுதங்களும் அவனை யாதும் செய்ய இயலாதனவாயின. அவர்கள் தொடுத்த அம்புகளும் அவைகளை விடுத்த விற்களும் அவர்கள் கண்முன்னே துண்டங்களாகிவிழுந்தன. (வில்லும் அம்பும் வீணுயினவேயென்று வாள்களெடுக்க, அந்த) வாள்களோடு அவைகளையெடுத்த கைகளும் துண்டிக்கப்பட்டு வீழ்ந்தன. (அவர்கள் பயந்து ஓடுதற்கு) விரைந்த பாதங்களும் கண்டிக்கப்பட்டன.

குதிரைகள், குளம்புகள் துணிந்தும், கண்கள் சிதைந்தும் பற்களும் மேல்வாய்களும் பழுதுபட்டும் விழுந்தன. தேர்கள், பிணங்கள்

---

* ஆளி மேலும் ஆளின் மேலும் ஆனை மேலும் ஆடல்மா
மீளி மேலும் வீரர் மேலும் வீரர் தேரின் மீதினும்
வாளின் மேலும் வில்லின் மேலும் மண்ணின் மேல்வ ளர்ந்தமாத்
தூளி மேலும் ஏற ஏற வீரன் வாளி தூவினுன்.

ஆளி - யாளி. ஆள் - காலாள் - படைவீரன். ஆடல்மா - ஆடுதலையுடைய (நாட்டியக்) குதிரை. மீளி - பேய். வாளி - அம்பு. மாத்தூளி - மிகுதியான தூள்கள். ஏற ஏற - அதிகமாக அதிகமாக.

குவிந்த மேடுகளைக் கடக்கமாட்டாதனவாய், ஆயிரக்கணக்கான அம்புகளால், நூறுநூறுகூறுகளாக நொறுங்கின. அந்தக் 'தேர்க ளென்று வந்தபாவி என்னசெய்கை செய்யுமோ!' அம்புபடுதற்கு முன்னதாகவே செத்தவையென்னும்படி யானைகள் வெகுலகுவாக வீழ்ந்தன.

அரக்கருடைய தலைகளை அறுக்கவிடுத்த அம்புகளின்வாய்கள் கக்கிய அக்கினியால், தேர்கள்மேலும் யானைகள்மேலும் ஏற்றிய கொடிக்காடு எரிதல், இடிவீழ்ந்தெரியும் மரக்காடு எரிதல் போன்றது. இராமபாணங்களால் அற்றதலைகள் மேலெழுந்தவை கள் தம்மைத் தாக்குமென்று அவற்றினின்று தப்புதற்கு விண்ணில் உள்ளோர் அங்குமிங்கும் ஓடுகினார்கள். விண்ணிலெழுந்த அத் தலைகள் கல்மாரிபோல வீழ்பவைகள் தம்மேல் விழுமென்று அஞ்சி மண்ணிலுள்ளார் மறுகினார்கள்.

இராக்கதர்செய்த போர்

189 தெய்வநெடும் படைக்கலங்கள் விடுவர்[1] சிலர்
சுடுகணைகள் சிலையிற் கோலி
எய்வர்சில ரெறிவர்சில ரெற்றுவர்சுற்
றுவர்[2]மலைகள் பலவு மேந்திப்
பெய்வர்சிலர் பிடித்துமெனக் கடுத்துறுவர்
படைக்கலங்கள் பெறது வாயால்
வைவர்சிலர் தெழிப்பர்சிலர் வருவர்சிலர்
திரிவர்சிலர் வயவர் மன்னோ.

கொண்டுகூட்டு: வயவர் சிலர், தெய்வ நெடும்படைக்கலங்கள் விடுவர்; சிலர், சுடுகணைகள் சிலையிற்கோலி எய்வர்; சிலர் எறிவர்; சிலர், பலமலைகள் ஏந்திச் சுற்றுவர், எற்றுவர், பெய்வர்; சிலர், 'பிடித்தும்' எனக் கடுத்து உறுவர்; சிலர், படைக்கலங்கள் பெறாது வாயால் வைவர்; சிலர் தெழிப்பர் சிலர், வருவர்; சிலர் திரிவர்.

பொருள்: வீரர்சிலர், சிறந்த தேவாத்திரங்களைவிடுவர்; சிலர், வெய்யபாணங்களை வில்லில்தொடுத்து எய்வர்; சிலர், (எறிபடைக் கலங்களை) எறிவர்; சிலர், பல மலைகளை ஏந்திச் சாரிகைசுற்றி(ச் சில மலைகள்கொண்டு) மோதுவர்; (சிலமலைகளை) எறிவர்; சிலர், (இராமனைப்) பிடித்துக்கொள்வோமென்று விரைந்துசெல்வர்;

சிலர், ஆயுதங்கிடையாமையால், வாயால்வைவர்; சிலர், அதட்டு வர்; சிலர், (எதிர்த்து) வருவர்; சிலர், (மதர்த்துத்) திரிவர்.

கணை - அம்பு. சிலை - வில். கோலி - அமைத்து (தமிழ்ச்சொல்லகராதி). பெய்தல் - புகவிடுதல் (தமிழகராதி) - போடுதல். பிடித்தும் - பிடிப்போம். எற்றுதல் - மோதுதல். கடுத்து உறுவர் - விரைந்துவருவார். தெழித்தல் - அதட்டல். வயவர் - வீரர். 'மன்' 'ஓ', அசைச்சொற்கள்.

பாடபேதம்: [1] எறிவர். [2] குத்துவர்.

சூரியனைச்சூழ்ந்த கார்காலமேகம்போல, (இராமனைச்சூழ்ந்தவர்களும்) வேகமுள்ள பெரிய ஆயுதங்களை ஏந்திய எண்ணிறந்த(வர்களுமான) கரிய இராக்கதர்களுள்ளே பலர், ஆரவாரஞ்செய்வார்கள்; பலர், நெருங்கிப் பொருவார்கள்; பலர், அடுத்தடுத்து ஆயுதங்களை அள்ளியள்ளி(ப் பூமியை)த் தூர்ப்பார்(போல மிகுதியாக எறிவார்கள்); பலர், சூலத்தை விடுவார்கள்; பலர், (இராமபாணங்கள் படாமல்) ஒளிந்துகொள்வார்கள்; பலர், (கண்களில்) நெருப்பு வெளிப்பட (இராமனை உக்கிரமாகவிழித்து)ப் பார்ப்பார்கள். பலர், (அவன்மேல் எறிதற்குப்) பெரியமலைகளை வேருடன்பேர்ப்பார்கள்.* இராமபாணங்கள், இராக்கதர் எய்த எறிந்த எடுத்த பிடித்த ஆயுதங்களனைத்தையும் முறித்தன; இராமனைச்சுற்றிச் சூழ்ந்த தேர்களையும் யானைகளையும் குதிரைகளையும் அழித்தன; (காலாள்களுடைய) செம்பட்டைமயிர்த்தலைகளைச் சேதித்து உருட்டின. தன்னைச்சூழ்ந்த கரிய இராக்கதசேனையைத் தொலைத்து வெளிப்பட்ட இராமன், இருளை ஒழித்துத்தோன்றும் சூரியன்போன்றான்.

---

* ஆர்ப்பர்பலர்; அடர்ப்பர்பலர், அடுத்தடுத்தே படைக்கலங்களள்ளியள்ளித்
தூர்ப்பர்பலர்; மூவிலைவேல் தூரப்பர்பலர்; கரப்பர்பலர்; சுடுதீத்தோன்றப்
பார்ப்பர்பலர்; நெடுவரையைப் பறிப்பர்பலர்; பகலோனைப் பற்றிச்சுற்றும்
கார்ப்பருவ மேகமென வேகநெடும் படையரக்கர் கணிப்பிலாதார்.

ஆர்த்தல் - ஆரவாரித்தல். அடர்த்தல் - தாக்குதல். படைக்கலம் - ஆயுதம். தூர்த்தல் - மிகப்பொழிதல். மூ இலைவேல் மூன்று இலை (தகட்டு வடிவான கவர்)களையுடைய ஆயுதம் - சூலம். தூரத்தல் - செலுத்துதல். கரத்தல் - ஒளிந்துகொள்ளுதல். நெடுவரை - பெரிய மலை. பகலோன் - சூரியன். படை - ஆயுதம்.

'காப்பது - சமயம்பார்த்துப் பகையை ஒறுத்தற்கு' வை. மு. கோ.

## இராமபாணச்செயல்கள்

மருதநிலமக்கள் விளைந்த நெற்பயிர்த்தாளோடு (அப்பயிர்களுள் இடையிடையே முளைத்த) தாமரைகளையும் சேர்த்தறுக்கின்ற செல்வம்படைத்த கோசலநாட்டுக்கு இறைவனுன இராமனுடைய பாணங்கள், சொல்லமுடியாத வல்லமையுடைய இராக்கதர்களுடைய கவசங்களைத் தூளாக்கும்; அவர்கள் உடல்களைத் துண்டப்படுத்தும்; விற்களை அறுக்கும்; தலைகளையறுக்கும்; வலிமையை அறுக்கும், விடாது வீசப்படுகின்ற மலைகளையறுக்கும்; மரங்களையறுக்கும்; (மலைகளையும் மரங்களையும் எறிந்த) கைகளை அறுக்கும் என்றால், எவரேனும் (இந்த அம்புகளுக்கு) எதிராகநிற்க முடியுமோ? சதகோடிக்கணக்கான வேல்களும், அம்புகளும், கொலைசெய்யும் மலைகள் உளவேல் அவைகளையொத்த ஆனைகளும், குதிரைகளும், தேர்களும், அழிந்தன. அழித்தவன், ஒருத்தனே.

ஏழுலகத்தோரையும் வருந்தச்செய்கின்ற எண்ணிறந்த பெருவில்லிகள் ஒருவில்லிமீது ஏககாலத்திற் சரமழைபொழிந்தார்கள். அவன், எதிர்ச்சரமழைபொழிந்து, அந்த நிர்ப்பாக்கியர்களுடைய தலைகளைப் போக்கி, மலைகள்போலும் உடல்களைச் சிதைவுறும்படி செய்தான். ஒவ்வொருவரும் நூறுயிரம்யானைப் பலமுடையரான அளவிறந்த அரக்கர், ஓரம்பினுல் அந்த அபாரபலமனைத்தும் அழிந்து மடிந்துவிழுந்தார்கள். (அறுபட்ட அவர்களுடைய உடம்புகளினின்று பெருகிய) இரத்த ஆற்றை நீந்திக் கரையேற மாட்டாதனவாய் யானைக்கூட்டங்கள் அந்த ஆற்றேடு கடலையடைந்தன. அடுக்கடுக்காக உள்ள யானைப்பிணங்களாலும் குதிரைப் பிணங்களாலும் தேர்களாலும் ஆகி, ஆகாயமளாவிய குவியல்கள், உயிர்பெற்றனவோவென்று எண்ணும்படி, கவந்தங்கள் ஆடுதலால், அசைவனவாயின. கருஞ்சூரியன் உண்டானல், அதனை ஒத்த இராமன், இறந்தவர்களுடைய இரத்தந்தோய்ந்து உகாந்தகாலத்தில் உலகத்தை யெரிக்கும் செஞ்சூரியன்போன்றுன்.

## இறந்தவர்போக எஞ்சின இராக்கதர் இராமனைச்சூழ்ந்து மொய்த்தல்

இறந்தவர்போக, எஞ்சிய இராக்கதர்கூட்டம், இராமனுயிரையுண்ண ஒருமித்துச் சூழ்ந்து மொய்த்தது. அந்த இராக்கதக்

கூட்டம், தேனையுண்ணத் தேன்கூண்டைச் சூழ்ந்து மொய்க்கும் தேனீக்கூட்டத்தை ஒத்தது. அவன் அவர்கள் ஒவ்வொருவர் மேலும் அளவற்ற அம்புகளை எய்தான். உடல்முழுதும் அம்பு தைக்கப்பெற்ற அவர்கள், வெளிப்புறம் முழுதும் முள்நிறைந்த கழற்சிக்காயை(யும் பலாக்காயையும்) ஒத்தார்கள். அவர்களிற் பலர் உயிர்பிரிந்தார்; பலர் ஓடினர்; பலர் வருந்தினர்; பலர் போர் புரிந்தார்; பலர் உடல்நெரிந்தார்; பலர் புரண்டார்; பலர் உருண்டார்; பலர் கரிந்தார்; பலர் எரிந்தார்; பலர் குடல்சொரிந்தார்; பலர் தலைவெட்டுண்டார்.

## அரக்கர் அதிசயிக்க இராமன் சாரிகை திரிதல்

இராக்கதர் ஒவ்வொருவருக்கும் 'முன்னேயுள்ளான்; பின்னேயுள்ளான்; இடப்பக்கத்தேயுள்ளான்; வலப்பக்கத்தேயுள்ளான்; மலைமேலுள்ளான்; நிலமேலுள்ளான்; (சேனைக்கு) உள்ளேயுள்ளான்; வெளியே உள்ளான்; இவனுடைய வேகம் இருந்தபடி என்னே!' என்னும்படி, இராமன், அதிவேகமாகச் சாரிகைதிரிந்தான். அந்த வேகத்தினால், அவர்களெல்லாரும், தனித்தனியே, 'என்னெதிரேயுள்ளான் என்னெதிரேயுள்ளான்' என்னும்படி ஓர் இராமனே பல ராமராகத்தோன்றினான்; இவ்வாறாக, அவர்களை நீங்காதாகக் காணப்பட்டதனால், அவர்களுடைய நிழலென்னலானான்; (அவர்கள் கண்ணில்தோன்றும் தோற்றத்தால் அவர்களுடைய உடலை விட்டுப் பிரியாததுபோலக் கருத்தில்தோன்றும் அச்சத்தால் உள்ளத்தைவிட்டுப் பிரியானாய்) அவர்களுக்குப் புறத்தேயும் அகத்தேயும் உள்ளானென்னும்படி உற்றான்*. அவன், கணைமழை பொழிந்துகொண்டே, கடுஞ்சாரிகை திரிந்ததனால், சண்டமாருதம் சுழன்றடிக்க முறிபட்டுவிழும் மலைகளும் மரங்களும்போல, இராக்கதருடம்புகள் கண்டதுண்டமாய் விழுந்தன. அறுபட்ட அவர்கள் தலைகள், (அறுக்கும் அம்புகளால் உந்தப்பட்டு) மேலெழுந்து கீழ்வீழ்ந்திடுதல், அம்மனைவிளையாடும் விசயமங்கை மேலெறிந்த அம்மனைகள் கீழ்விழுந்திடல்போன்றது. கோரப்பற்களும் யானைக் கொம்புகளும் குவிந்துகிடந்தவை, பலபலநாள்களில் தோன்றும் பிறைச்சந்திரன்கள் ஒருங்குகிடந்தலை (வெள்ளைவண்ணத்தாலும் வளைந்தவடிவத்தாலும்) ஒத்தன. விண்ணிலே (வீரசுவர்க்கத்திலே),

*உள்ளன்றியும் புறத்தேயுமுற் றுளனுமென உற்றான்.

இறந்த இராக்கதருடல்களிலுறைந்த உயிர்கள் நிறைந்தன. மண்ணிலே, அவர்களுடல்கள் நிரம்பின. கடலிலே, உடல்களின் புண்களினின்றுபெருகிய இரத்த ஆறுகள் நிறைந்தன. போர்க் காட்சியைக் கண்டுகொண்டிருந்த தேவர்கள்கண்ணிலே, இராமன் விற்றொழில்வித்தைவகைகளின் காட்சிகள் நிறைந்தன.*

மாலியென்ற படைத்தலைவன் மற்றைத்தலைவர்க்குக் கூறுதல்

படைத்தலைவருள் மாலியென்பவன், மற்றவர்களைநோக்கி, 'இந்த ஒரு தனிச் சிறிய) மனிதன் இந்த மாபெருஞ்சேனையை வதைப்பதே! இது பொருந்துவதே! மலைகள்போன்ற நாமெல்லாரும் வெல்லுவதென்பது சிறிதுமில்லாமல் (வாளா செயலற்ற மரங்கள் போல,) நின்று வெண்பல்லை மென்றுகொண்டிருப்பதே! (பளா! பளா!! பளா!!! நன்றாயிருக்கிறது!!!) என்றான்.† என்றவன், 'மனங்

---

* விண்நிறைந்தன மெய்யுயிர்; வேலையும்
புண்நிறைந்த புனலின் நிறைந்தன;
மண்நிறைந்தன பேருடல்; வானவர்
கண்நிறைந்தன விற்றொழிற் கல்வியே.

மெய் உயிர் - உடலின் (உள்ளேயுள்ள) உயிர். வேலை - கடல். புனல் - நீர் (இங்கே செந்நீரென்னும் இரத்தத்தைக் குறித்தது). பேருடல் - பெரிய உடம்பு. வானவர் - தேவர்.

உடலுயிர்களில், உடல், பொய்போல் நிலையாத்தன்மையதாயும், உயிர், மெய்போல நிலைக்குந்தன்மையதாயுமிருத்தல்பற்றி, உயிரை 'மெய்யுயிர்' என்றார் என்னலாம்.

† 'ஒல்வ தே!இவ் வொருவன்இவ் வூகத்தைக்
கொல்வ தே!நின்று, குன்றன்ன யாமெல்லாம்
வெல்வ தேதும் இலாமையின் வெண்பலை
மெல்வ தே!என மாலி விளம்பினான்'

ஒல்லுதல் - பொருந்துதல்; தகுதல். ஊகம் - படைவகுப்பு (இலக்கணையாகப் படையை உணர்த்தியது).

அச்சான பல பிரதிகளில் 'மாலி' என்றுள்ள இடத்து 'வன்னி' யென்ற பாடம் காணப்படுகின்றது. இது தவறான பாடம்; ஏனெனில், இப்படலத்தில் இந்த கஙுo-ஆம் பாட்டுவரையுமேயன்றி,

குழம்பி மதிமயங்கினீர்கள். இவனுடைய பாணங்கள் நம்மேல் விழு தற்குமுன், நாமெல்லாரும் ஒன்றுகூடி மேல்விழுந்தாலும், இவன் நசுங்கி இறந்திடுவான். (ஆயுதப்பிரயோகம் அவசியமில்லை. நாம் சும்மாநிற்பது,) இந்த ஆயிரம்வெள்ளங்கொண்ட மூலப்படை (இவன் அம்புகளால்) அழியவிட்டுநிற்பதே! (தாமதஞ்செய்யாதீர் கள். இவன்மேல்) உடனே எல்லாரும் பாயுங்கள்' என்றான்.

## அரக்கர் அம்புமுதலிய படைகளைவிடுத்தலும் அவைகளை இராமபாணங்கள் அழித்தலும்

ஒரு கருமலைமேல், பெருமேகங்கள் பல, மழைத்தாரைகளைப் பொழிதல்போல, இராமன்மேல் எண்ணிறந்த இராட்சசர், அம்பு முதலிய பலபல ஆயுதங்களைச் சொரிந்தார்கள். அவர்கள் அவனைக் குறித்து எய்த அம்புகளும் எறிந்த ஆயுதங்களும் முறியவும், தேர் யானை குதிரைகள் தரையில் மடிந்து சாயவும், காலாள்கள் சிதைந்து சிதறவும் செய்தன, இராமன்பாணங்கள்.

## இரத்தப்பெருக்குவருணனை

இறந்த சேனைவீரர் யானை குதிரைகளின் இரத்தம் பெருகக் கண்டு களித்துக் குதிக்கும் கொள்ளிவாய்ப்பேய்கள், கலங்கரை விளக்கங்கள்*போன்றன. பூமியின் கடற்பகுதி, இரத்தவெள்ளம் கலக்கப்பெற்றுச் சிவந்த ஆடையாக, நிலப்பகுதி, இரத்தக்குழம் பான செஞ்சாந்து தோய்ந்ததாகப் பூமிதேவி, செவ்வாடையுடுத்துச்

---

'எய்யெனும் மாத்திரத் தவிந்த தென்பரால்
செய்தவத் திராவணன் மூலச் சேனையே'

என்ற கஅசஉ-ஆம் பாட்டு முடியும்வரையும் மூலபலப்போர் கூறப்படுதலா லும், கஅடு-ஆம் பாட்டுமுதலாக இப்படலமுடியுமளவும் 'வன்னி' என்ற படைத்தலைவனுள்ளதும் பலதிசைகளிலிருந்தும் பாதாளத்திசைகளிலிருந் தும் வந்த இராக்கதர்களடங்கியதுமான படைகளின்போர் கூறப்படுதலாலு மென்பது.

* கலங்கரைவிளக்கம் - கப்பல் (மாலுமிகளை, 'இங்கே சேமமான கரை யுள்ளது, வாருங்கள்' என்று—) அழைக்கும் தீபம் - விளக்குக்கூடு (Light-house).

செஞ்சாந்து புனைந்து மங்கலக்கோலம் பூண்டாள்போன்றாள்.* இரத்தக்கலப்பால், உப்புக்கடல், மதுக்கடல் (மது - தேன்), நெய்க்கடல், தயிர்க்கடல், பாற்கடல், கருப்பஞ்சாற்றுக்கடல், நன்னீர்க்கடல் என்ற ஏழுகடல்களும் ஒரே இரத்தக்கடலாயினமையால் கடல்கள் ஏழென்பது தவறாயினது. இதன்காரணம் ஒருவில்லே. (அந்தவில் கோதண்டமெனப் பேர்பெற்ற இராமன்வில்லென்று கூறவேண்டியதில்லை.

## இராக்கதப்படை திரும்பவும் போர்செய்து மாளுதல்

இராக்கதர், வீராவேசங்கொண்டு, நெருங்கி, ஆயுதங்களை எடுப்பாரும் எறிவாரும் (இராமன் அம்புகளைத்) தடுப்பாரும் (தடுக்கமுடியாமையினால்) சலிப்பாரும் (அந்த அம்புகள் தாக்கச்) சாய்வாரும் துண்டுபடுவாருமாயினர். இராட்சசசேனையின்முன்னணி, பக்கஅணி, பின்னணி, இடையிலுள்ள அணிகளைக்குறித்து, ஊடே ஊசிநுழைய இடமில்லாதபடி எய்யப்பட்ட இராமபாணங்களுக்கு இராக்கதருயிர்கள் இரையாயின.

இராமபாணங்கள் உகாந்தகாலாக்கினியொத்தன; இராக்கதர் (அந்த ஊழித்தீயினால்) எரிந்த மரக்காடொத்தனர். அந்த அம்புக்கூட்டம், வலைபோன்றது; அரக்கர் வலைக்குள் அகப்பட்டு மாண்ட

---

* கணவனைக் கூடலுறுகின்ற மகளிர் செங்கோலம் பூண்பரென்பதனை,

"சேக்கை மேவினி திருந்தாங்
காத்தப் பூம்பட் டரைமிசை யுடீஇக்
குரற்றலைக் கூந்தற் குடசம் பொருந்திச்
சிறுமலைச் சிலம்பிற் செங்கூ தாளமொடு
நறுமலர்க் குறிஞ்சி நாண்மலர் வேய்ந்து
குங்கும வருணங் கொங்கையி னிழைத்துச்
செங்கொடு வேரிச் செழும்பூம்பிணையல்
சிந்துரச் சுண்ணஞ் சேர்ந்த மேனியில்
அந்துகிர்க் கோவை யணியொடு பூண்டு
....................செவ்வணி காட்ட"

என்ற சிலப்பதிகாரத்தாலும் அறியலாம். இனி, 'மணத்தின் கடைநாளில் ஆலத்தியை மேலேபெய்து செய்யவாடைதரித்தல் நிகழ்தலைக்கொண்டு கூறியதென்பாருமுளர்.' வை. மு. கோ.

மீன்கள்போன்றனர். இராமன் ஊழிக்காற்றுக்கொப்பானுன்; இராக்கதர் அக்காற்றினுல் தூளான மலைகளுக்கொப்பானுர். இராமன், உகமுடிவில் உலகேழினும் உள்ள உயிர்களையெல்லாம் ஒருங்கே ஒழிக்கப்பொங்கும் ஊழிக்கடல் நேர்ந்தான்; இராக்கதர், அந்த உயிர்கள் நேர்ந்தார். இராக்கதர்கூட்டம், இலஞ்சம் வாங்கிக்கொண்டு நியாயசபையில் பொய்ச்சாட்சிகூறியவன்குலத்தை நிகர்த்தது. இராமன் அந்தக் குலத்தைபழிக்கும் அறக்கடவுள் நிகர்த்தான்.

## இரத்தப்பெருக்கும் பிணக்குவியலும்

இரத்தவெள்ளம், கடலினும், இலங்கையின் உள்ளும் புறமும் மேடுபள்ளம் தெரியாதபடி நிரம்பியபோது, இலங்கைநகரத்துள்ள இராட்சசிகள், கலங்கி, அலறிக்கொண்டு, கால்தடுமாற ஓடினுர்கள்.

## படைத்தலைவர் இராமனேடு போருதல்

நூறுசதகோடியரான படைத்தலைவர்கள், தேர்களையும் யானைகளையும் யாளிகளையும் குதிரைகளையும் சிங்கங்களையும் வாகனங்களாகக்கொண்டு, அவைகளை இராமனைநோக்கிச்செலுத்திப் பேரிடியும் பேரனலும் ஒத்த கொடிய படைக்கலங்களைப் போர்க்களம் தூரும்படி தூவிக்கொண்டு நெருங்கினுர்கள். இராமன் அந்தப் படைத்தலைவர்களைநோக்கி, 'அட! வாழ்நாள்குறுகியவர்களே! வாருங்கள். (எனக்கு) எதிரே வாருங்கள். வந்து உங்களுடைய அரிய உயிர்களையும் பலவரங்களையும் தாருங்கள்' என்பனபோன்ற வார்த்தைகளைச்சொல்லி, (அவர்களுக்கு) எதிராகப்பொழிந்தனவும் தடுத்தற்கரியனவுமான கொடியபாணங்களை(க் கண்டவர்கள் ஒளியினுல்) கொடியமின்னல்கள் என்று எண்ணும்படியாகவும் (அளவினுல் பெரிய) கடல்களென்றெண்ணும்படியாகவும் ஏவினுன். அந்த அம்புக்கூட்டங்களனைத்தையும் அவர்கள் ஒவ்வொருவரும் ஊக்கங்கொண்டு தடுப்பாரானுர்.* ஆனவர்கள், இராமன்விடுத்த அக்

* 'வம்மின்,அட, வம்மின்,எதிர் வந்துநும தாருயிர் வரங்கள்பலவும்
தம்மின்'என இன்னமொழி தந்தெதிர் பொழிந்தன தடுப்பரியவாம்
வெம்மின்என, வெம்பகழி வேலையென ஏயினன் அவ் வெய்யவினையோர்
தம்மினம் அனைத்தையும் முனைந்தெதிர் தடுத்தனர் தனித்தனியரோ.

வம்மின் - வாருங்கள். அட, இகழ்ச்சிக்குறிப்புச்சொல். தம்மின் - தாருங்கள், நுமது ஆருயிர் - உங்களுடைய அருமையான உயிர்கள்.

கணைகளை அக்கணமே அறுத்தொழித்து, மேகங்கள் மழைபொழி வதினும் மிகுதியாக அம்புகளைப் பொழிந்து, அவனை எல்லாத் திசைகளிலும் சூழ்ந்து மறைத்தார்கள்.

### இராமன் சேமத்தைப்பற்றிப் பயப்பட்ட தேவர்களைப் பரமனும் பிரமனும் தேற்றுதல்

(படைத்தலைவர் சூழ்ந்துமறைக்க, இராமன் காணப்படானாக, அவனுக்கு யாதுநேர்ந்ததோவென்ற பயம் கிடந்து அலைக்கப்பட்ட நெஞ்சினரான) தேவர்கள், சிவபிரானை அணுகிச் 'சேனைத்தலைவர், ஒவ்வொருவரும் இராவணனினும் மும்மடங்கு பெரிய உருவ முடையராய்க் கணக்கற்றவராய்ப் பாணங்களைப் பொழிகின்ற மேகங்களைப்போன்று, தனியனான இராமனை வளைத்துக்கொண் டார்கள். அவர்கள் வலிமை, (வாய்ச்சாபமுடைய பெரியோர்கள்) சாபத்தால் ஒழித்தால் ஒழிக்கக்கூடியதேயன்றி(க் கைச்சாபம்* உடைய வீரர்கள்) ஆயுதத்தால் ஒழிக்கக்கூடியதன்று. அவர்கள் திருமாலினாலும் உன்னாலுமே செயித்தற்கரியார்' என்றார்கள். சிவபெருமான், 'தேவர்களே! அஞ்சாதீர்கள். அவர்கள் எத்தனைய ராயினும் அத்தனையரும் தீப்பற்றியபஞ்சுபோலத் தீந்தழிவார்கள். அமுதத்தை நஞ்சு வென்றாலும், அறச்செயலை வஞ்சச்செயலும் பொய்ச்செயலும் வென்றாலும், இராமனை இராக்கதர் வெல்லமாட் டார்கள். இராக்கதரில், விபீடணனொருவன்தவிர, யாரும் உயி ரோடிரார். இனி, நீங்கள் ஒளிந்துகொள்ளக் குகைகளைத் தேட வேண்டியதில்லை. இன்றைப் பகலிலேதானே இராக்கதரெல்லாரை யும் இராமன் கொன்றிடுவான்.' என்றான். இவ்வாறு பரமன்கூறிய தைப் பிரமன் ஆமோதித்தானாக, அமரர் அச்சம் அகன்றனர்.

[தொடரும்]

---

இன்ன - இப்படிப்பட்ட. மொழி - வார்த்தை. பகழி - அம்பு. வேலை - கடல். எயினன் - எவினன். தம் இனம் - அம்புகளின்கூட்டம். 'அட' என்பதற் குக் 'கொல்ல' என்றும் 'தம் இனம்' என்பதற்கு அரக்கர்களுடையகூட்டம்' என்றும் பொருள்கூறுதலுண்டு.

* சாபம் - வில்.

௨

# மறுமொழியில் வருமுரண்கள்

செந்தமிழ்ப்பத்திராசிரியர், 'வந்தெதிரே தொழுதானை' எனும் கம்பர்பாட்டுக்குப் பொருள்விளக்குமாற்றால் வைணவருள் ஒரு வகுப்பினர்கூற்றைக் கம்பர்கூறுவதாகக்காட்டி ஒருரை எழுதினார்கள். வந்து நின்றுவணங்கிய குகனைப் பரதன் தேண்டாகாரமாய் விழுந்து சேவித்தான்'' என்பதே அவர்கள்கூற்று. சமயமாபாலமைக்கு மதன்தகவுகருதாமல், கம்பர்பாடும் வரலாற்றுமுறையில் அக்கூற்றை அவர்பாட்டிலேற்றிப் போற்றுதல் புலமையறிவுக்கும் ஒழுக்கமரபுக்கும் பொருந்தாதென்பது என்கருத்து. செந்தமிழி லது வந்ததைக்காட்டி, அந்தப்பாட்டுக்குப் பொருள்சொல்ல ஒரு நண்பரெனைக் கேட்டார். விழுந்துதொழுதவன் குகனே; அதனாலவன் திரும்பத் தெண்டனிட்டதைக் கம்பர் ''மீட்டுமண்ணதனில் வீழ்ந்தான்'' எனக் களங்கமற விளங்கவைத்தார்,—என்று நான் வினவியவருக்கு விடைபகர்ந்தேன். அதனைச் செந்தமிழில் வெளியிடவேண்டினர். அதற்கிணங்கி என் கருத்தை விளக்கி, 11—8—41-ல் செந்தமிழ்நிலையத்துக்குப் பத்திராசிரியருக்கே அனுப்பினேன். செந்தமிழ் உதவிப்பத்திராசிரியர், ஆனியுமாடியும் கூடாமையினால், என் உரையை ஆவணிப்பகுதியில் வெளியிடுவதாக 16-8-41-ல் எனக்கு நிருபம் அனுப்பினர். அப்படியே 10 நாளில் அதன் (Proof) சோதனைமுதற்படி எனக்குத் திருத்தவும் வந்தது. பெற்ற அன்றே திருத்தி அனுப்பினேன். எனினும், திங்கள் இரண்டு மறைந்துகிடந்து திரண்ட மறுமொழிக் கோள்மறைத் துணையுடனிணைந்து வெளியேறி, 4—11—41 மாலை என்கை வரப்பெற்றேன்.

என் முதலுரையிலேயே, வாதம்வளர்த்துப் பேதம்விளைப்பது என் விருப்பமன்று என்று அறிவித்தேன். ''வாதப்போர்கருதி இதை வரைந்தேனல்லேன். உறழ்ச்சிமகிழும் உளக்கிடையும் உடையனல்லேன். ............பத்திராசிரியர் புத்துரையைப் பலர்

ஆராயாது எளிதிலுடன்படக்கூடுமாதலின், அதை விலக்கிச் சிந்தித்துச் சீர்தூக்கத் தூண்டுவதே (என்) உரையின்நோக்கம். அதனை விகலுறழ்வின்றித் தந்த ஈருரைகளையும் தூக்கி, ஆய்பவர் அறிவாற் கண்ட செம்பொருள் கொள்வரென்று நம்பி நான் முடிக்கலானேன்" —என்று முன்னமே என்கருத்தை விசதமாக விளக்கினேன். அதனல், பத்திராசிரியர் முன் எழுதியவுரையும் அதற்கு நான் எழுதிய எதிர்உரையும் இரண்டையும் படிப்போர்நடுநிலைமுடிவுக்கு விடுப்ப தென்கருத்தென விளங்கும். செந்தமிழ்ப்பத்திராசிரியர் அதனை ஒவ்வாமல், நீண்ட மறுமொழி வேண்டியாங்கெழுதி என்னுரையோடு பின்னி விடுத்துளர். பத்திரிகை அவர்கள் கையிலிருப்பதனல் கடைஉரையும் அவர்களதாமென்பது நன்கு புலப்படும். ஆதலினும், வாதப்போர் நற்போதையழிப்பதும், பேதம் விளைப்பதும் போன்ற பற்பல தீதுபயத்தலால் பத்திராசிரியரொடு வீணே நெடிய சொல்வழக்குத்தொடரத் துணிகிலன். எனினும், அவர்கள் மறுமொழிதரும் சில முரண்களைக் காட்டி, குதர்க்கம் எதிர்க்கப்படுமென் றறிவிக்கும் கடமையுணர்வா லிதை வரையலாயினேன்.

எங்கள் இருவருரைக்கும் கட்டளைக்கல் கம்பர்கவிகளே. 'வந்தெதிரேதொழுதானை' என்ற பாட்டில், 'அவனுமவனடிவீழ்ந்தான்' என்ற தொடர்ப்பொருளே எங்களிடைக் கருத்துவேறுபாட்டுக்குக் காரணம். நின்ற பரதன், வந்த குகன், இருவருள் யாரடியில் யார் விழுந்தனர்? என்பதே வினு. ஆசிரியரவர்கள் குகனடியில் பரதன் வீழ்ந்தான் என்கிறுர்கள். குகனே பரதனடியில்விழுந்து தெண்டனிட்டான் என்ப தென்னுரை. அடிபணிதற்கும், பணியப்படுதற்கும் அவ்விருவருள் தகவுமிகவுடையார் யாவரென்பதுபற்றி எங்கள் கருத்தும் அதன்பொருத்தமும் ஆராய்ச்சிக்குரியவல்ல. கம்பர் அப்பாட்டுக்களாற் குறிக்கும் கருத்தைப் பாட்டுச்சொற்கொண்டு துணிவதே குறிக்கோளாகும். "வந்தெதிரேதொழுதானை" எனவும், கேட்டனன் கிராதர்வேந்தன் எனவும் வரு மிருபாட்டும், வணங்கல் அடிவீழ்தல், எனு மிருவேறு வழிபாடுகளை அவ்விருவருக்குள் வகுக்கின்றன. அவற்றுள் வணங்குதல் ஒருமுறையும், அடிபணிதலிருமுறையும் குறிக்கப்படுகின்றன. ஆசிரியரவர்கள், "வணங்கின

தும் "மீட்டுமண்ணதனில்வீழ்"வதும் குகன்செயலென்றும், முதலில், "அவனுமவனடிவீழ்ந்தான்" எனச் சொல்லியது குகனுக்குப் பரதனிட்ட தெண்டனைத் தெரிவிப்பதென்றும் தன்முதலுரையில் விளக்கினூர்கள். வடகரையினின்ற 'பரதாழ்வானுடைய பிரபாவம் அறியாமையாலே, ராஜகுமாரன் என்பதுபற்றி லோகமரியாதையாலே வேடனுனநிலைகொண்டு (வந்த) குகன் வணங்கினான்'; ................."பரதாழ்வான் சுமந்திரன்சொல்லிய ஆப்தவாக்கியப்பிரமாணத்தாலே பாகவதோத்தமனென்று தெரிந்துகொள்ளப் பெற்ற அந்தக் குகப்பெருமாள் திருவடிகளிலே சொரூபப்பிராப்தமாகவே தெண்டாகாரமாய்விழுந்து சேவித்தான்" என்பது ஆசிரியர் விளக்கம். எனவே, அவ்விருவர்தம்முளிருவேறுபட்ட வழிபாட்டு வகைநிகழ்ந்ததென வரையறுத்துத் தன் முதலுரையில் ஆசிரியரவர்கள் வற்புறுத்தினூர்கள். இதனுல் வணக்கம் அடிவிழுதலின் வேறுபட்டதும் குறைந்ததும் என்பதே அவர்களுக்கும் கருத்தென்பது தெளிவு. எனவே, வணக்கம் பொதுவாக ஒருவர் ஒருவரைக் காணுங்கால் கைகுவியத் தலைசாய்க்கும் "உலகமரியாதை"க் குறி. படியினிலே உடலமுழுதும் ஒருங்குதொடவிழுந் தடிபணிதல் தெண்டன். தன் நாயகனும் இராமனுக்குக் கேடுசெய்யப்படையொடும்வந்தானென நினைத்து, அவ்வாறவன் "பகவத்விரோதி"யானதால், அவனைக் குகன் உவந்து வணங்க மனமிணங்காமல், ஒப்புரவுக் கடன்கழிக்க "உலகமரியாதையாலே யாரும் பிறருக்குச் செய்யும் வெறும்வணக்கஞ் செய்துநின்றான்." என்றுகூறி, குகன் முதலில் பரதனை அடிபணியாமல் வணங்கியமைந்ததற்குத் தான் கண்டவாறு நியாயமும் காட்டினூர்கள். பிறகு மன்னனை (இராமனை மீள)க் கொணர்வான்வந்தேன்" என்று பரதன்சொன்ன"பின் வேரோருயிர்முளைத்துக் கிளைத்தாற்போன்ற மனநிலையுடையனுய், இவன் (பரதன்) பரமபாகவதனென்றுதெரியாதே இவன்திருவடிகளிலே அபசாரப்பட்டேனே என்னும் அநுதாபத்தோடு ஒருமுறை தேண்டனிட்டு அபராதக்ஷாபணம்பண்ணிக்கொண்டு, மறுமுறை தரையில்விழுந்துதேண்டனிட்ட"தும் அதற்கு ஏதுவும் கூறினூர்கள். ஆகவே, குகன் முதலில் பரதன்பெருமை அறியாமல் அவனை வெறும்வணக்கஞ்செய்துநின்றான்; பரதன் தன் அடிவீழ, அவனை

எடுத்துத் தழுவிக் குதூகலித்தான். இறுதியில் பரதன்காலில் குக னிருமுறை விழுந்தான்,—என்று முடித்துக்காட்டினார்கள். இதில், அடிவீழ்தல் பரதனொருமுறையும், குகனிருமுறையுமாக மூன்றாகிறது. கம்பர் இரண்டேகூறி, இரண்டிற் பின்னது குகன்செய்தது என்று விளக்கித் தெளித்துள்ளார். அதுவும்போதாமல், இரண்டாவது விழுந்தவனேதான் முன்னும் விழுந்தவன் என்பதை விசதமாக்கி "மீட்டுமண்ணதனில்வீழ்ந்தான்" என்று தம்கருத்தை வற்புறுத்தினர். அதனால், மும்முறை அடிவிழுதல் பாட்டிலில்லாத கற்பனை; கம்பர்தரும் வரலாற்றிலமையாதது. அடிவீழ்தல் பாட்டின்படி இரண்டேயாதலானும், இரண்டாமுறை விழுந்தவனே முன்னும் விழுந்தானெனவும் அவ்வாறு இரண்டாமுறைவிழுந்தவன் குகனே எனவும் கம்பர் விசதமாக்கிவிட்டதாலும், வேடப்பெருமாள் தாடொழவீழ்த்திப்பரதவேந்தனைப்பாகவதனாக்கும்நோக்கம் ஈண்டுக்கம்பருக்கில்லையென்பது தேற்றம். அதனால், "அவனுமவன் அடிவீழ்ந்தான்" என்பதில், பெயரில்லாவிடினும், அடிவீழ்ந்த வினைக்கு எழுவாயான "அவன்" எனும் சுட்டுக் குகனையே குறிப்பது கையிற்கனிபோல் மெய்யினிது விளக்கும்.

அன்றியும், ஆசிரியரவர்கள் பரதன்வாயால் அவன் வந்தநோக்கம் கேட்கும்வரை குகன் பரதனின் இராமபக்திபறியாதநிலையிலிருந்ததாகக் கூறியதும், கம்பர்வரலாற்றுக்கு முரணாகும். தென்கரையிலிருந்து வடகரைக்குவருமுன்னே, தான் முதலிற்கொண்ட எண்ணம் தவறெனவும் பரதன் இராமன்பால் பெரிதும் அன்புடையான் என்றும் தேர்ந்து அவன்பெருமையை நன்கறிந்துகொண்டான்; அதன்பிறகே பரதனருகே வருகின்றான்;—என்று கம்பர் பாட்டுக்கள் தெளிக்கின்றன. "வற்கலையின் உடையானை" என்ற சொல்லோவியச்செய்யுளும், "நம்பியும் என்னாயகனை ஒக்கின்றான்"; "திசைநோக்கித் தொழுகின்றான்"; "உண்டிடுக்கண் ஒன்றுடையான்"; (இராமன்பால்) "உலையாத அன்புடையான்" எனும் பல தொடரும் பரதன் "பிரபாவம்" அறிந்து பாராட்டி, அவனைக் காண விழைந்தே குகன் கங்கைகடந்த நகுறலானான் என விளக்கும். இவையெல்லாம் கம்பர்கவிகள் தெள்ளத்தெளியத் தெரிக்கின்றன. அதனாலும், ஆசிரியர்கொள்கை பாட்டிற்கம்பர்காட்டும்நோக்கொடுபொருந்தாது. பரதன்பெருமையறிந்து அவனருகே குறுகும் குகன்

வணங்குமுளத்தொடு தொழுதெதிர்வருவதே இயல்பாம். அவ்வாறு வந்தெதிரே தொழுதானை அவன் வேடனாயினும் வணங்குவது பரத வேந்தனின் பெருந்தகவொடு பொருந்தியமையும். அப்பெரியான் தனை வணங்கத் தாங்காத குகனுமுடன் தாழாமல் பரதன் "அடி வீழ்ந்து" தொழுகின்றான். அதனைக்கண்டு அமையாத அன்புடைய பரதன் உடனே குகனை எடுத்தணைத்து மிக மகிழ்கின்றான். உலகிய லும் உயரொழுக்கும் அறஅறிவு மிலகு மிந்த வரலாற்றைக் கம்பர் கவி நடியாத நாடகமாய் நவிலக் காண்போம். இவைபலவும் என் னுரையில் எடுத்துக்காட்டி இயன்றவரை தெளிவாக விளங்கவைத் தேன்.

அதன்பிறகு, குகன் பரதன்பெருமையினை நன்கறிந்துவந்த தனைக் கம்பர்கூறக்கண்டதனால் அதை மறுக்க ஒல்லாமல், முதன் முதலே பரதனடிவிழுந்து குகன் பரசினதாய் உடன்பட்டு மறு மொழியி லாசிரியர் மாற்றி உரைதருகின்றார்கள். எனினும், தாம் கூறிய ஒன்றை மாறி முழுதும் வேறுகொள்ள மனங்கொள்ளாமல், எப்படியும் தப்ப ஒரு புதுக்கதையைப் புனைகின்றார்கள். "வணங்கி னான்" என்பதற்கு, "குகன் தன்தகுதிக்கேற்ப விழுந்து கும்பிட்டான் என்பதே பொருளாம்" என்று புத்துரைவகுத்து, என் எதிருரையை வென்றழித்த பெருமிதமும் கொள்ளுகிறார்கள். இந்த உரை முந்தி யவர்நினையாத புதியதென மறுமொழியி லவர்கள்தரும் சொற்சான் றே தெளியக் கூறும். அது வருமாறு:—"இனி மீட்டுமண்ணதனில் வீழ்ந்தான் என்பதற்குப் பத்திராசிரியருரை பொருத்தமற்றதாகத் தோன்றுமாயினும், அவர்க்கு முன்பு குகன் 'வந்து பரதனை வணங்கி னான்' என்ற வணக்கம் உலகியலும் தகுதியும்நோக்கி மண்ணிடை வீழ்ந்த வணக்கமென்று தெளியக்கிடத்தலால், அதனை நினைத்து 'மீட்டு மண்ணதனில்வீழ்ந்தான்'—என்று மறுமுறை வணக்கங்கூறினார் எனத் திருத்திக்கோள்ளவும் கூடுமாதலால், அவருரை குற்றமற்ற தாயிற்று." இதில், வணக்கம், 'மண்ணிடைவீழ்ந்தவணக்கம்' என் பது முன்பே யமைந்து தெளியக்கிடந்தால், இப்போது திருத்திக் கொள்ளக்கூடியதென்பதுமிகையாகும். முன்னுரையிலில்லாததால், அதைத் திருத்திக்கொள்ள நேருகிறது. அடிவீழ்தற்கு எதிராக அதிற் குறைந்து வேறுபட்டதுவே வணக்கமெனக் கம்பர்கவி

விளக்குவதைப் பத்திராசிரியரும் தம் முன்னுரையில் உடன்பட்டதால், அதைத் திருத்தினலன்றி அதனெடுமுரணும் புதிய வுரையைப் பட்டாங்கே தம் முன்னுரையுள்ளே புகுத்துதல் ஒன்ருதென்றுணர்ந்து, "திருத்திக்கொள்ளவுங்கூடுமாதலால்" என்று கூற வேண்டிற்று. திருத்திக்கொள்ளவுங்கூடாதென்பதைக் சுருக்கமாக விளக்குவேன்.

தொழுதலும் வணங்கலும் முழுதுடல் மண்பட விழுதலாகா வெறும் மரியாதைக்குறியெனுங் கம்பர்கவிச்சொற்கருத்தையே ஆசிரியரும் முதலுரையிற் கொண்டுரைத்தார்கள். அதனாலன்ருே, வேட்டுவக்குகனை மீட்டும் மண் வீழ்த்தும் கம்பர்பாட்டின்கூற்றுக்கு மாற்ருக இறுதியில் தெண்டனையிரட்டித் தெருட்டி அறுதியிட்டுறுதியாய் அறிவித்தார்கள்? அன்றி வணக்கமே விழுந்து தொழுவதாமாகில், அதனைக் காட்டிப் பாட்டில் "மீட்டும்" என்பதை அமைத்திருப்பார்களே. அவ்வாறு காட்டாமல், குகனுக்கு முதல் ஒருவெறும்வணக்கமும் அதனேடிறுதியில் இருமுறை அடிவிழுந்து எழுதலுமாக மும்முறை இருவகைவணக்கம் சார்த்தி அறிவனூற்றுணையால் கற்பனைசெய்தார்கள். பிறகு அது அளவைநூற்கடையில் விற்பனையாகாமைகண்டு அதன் சாயமாற்றி விலையேற்றத் தலைப்படுகின்றனர். மூதறிவுடையோர் இவ்வாறு பேதுறுவானேன்.? பொருள் ஒருப்பட்டபின் தவறுடன்பட்டுச் சாந்தியும் சால்பும் உறுவதைவிட்டுத் தடியடிக்கழைத்து மடிபிடித்திழுப்பானேன்? நிற்க. ஈண்டு, ஆசிரியரவர்களின் சொற்சுழலாட்டு நற்பயனுதவாமையைமட்டும் சுருக்கித்தருவேன். வந்தவுடனே முந்துறக் குகனே பரதனடியில் விழுந்து வணங்கினதை நிகழ்ந்ததென்றும், அது தகுதிநோக்கி நேரியதென்றும், ஆசிரியரவர்கள் பேசிவிட்டால், பிறகு எம்மிடைக் கருத்துவேறுபாடே சிறிதுமில்லையே. குகனைநிறுத்திப் பரதனைவீழ்த்திய அவர்களின் முதலுரையால், அதை எதிர்க்கநேர்ந்தது. பரதனைக் குகனே பாதம் பணிந்ததாய் ஒப்புக்கொண்டபின் வாதமும் வழக்கும் வம்புக்கு வளர்ப்பதேன்? பொருளொருப்பட்டபின் சொற்களைத் தொட்டுப் போர்வளர்ப்பானேன்? அடிவிழுந்ததனை அப்படியே கவிசொல்வதைவிட்டு, வணக்கச்சொல்லுள் வலிந்துபுகுத்தமுயல்வது முறையா?

ஆசிரியர் திருத்த நினைக்கும் கருத்தைப்புகுத்தில், பொருத்த மற்ற புதுமுரண் பலவாம். கூறுங்கருத்தைக் குறித்தற்குரிய வேறுசொற்களைத் தேர்ந்துநிறுத்தும் சிறந்த செய்யுட்செவ்வியைச் சிதைத்துத் "தெண்டனை"ச்சுட்டிச் சொற்பல திரட்டிக்கொண்டு கம்ப ரோர் நிகண்டியற்றுவதுபோல் நிறுவமுயல்வதேன்? தொழு தல் வணங்கல் அடிவீழ்தல் எல்லாம் ஒருபொருள்குறிக்கும் பல சொல்லாக்கி, ஆசிரியர்திருத்தம் பேசுகிறது. இவ்வாறுகொள்வது சொற்றலேமயங்கப் பொருள்வரம்பொழித்து நற்றமிழ்க்கவிமர பழிப்பதாகும். சொற்கடலரித்து நற்பொருள்தெரித்துப்பொற்புறு மொழிகளைப்பொறுக்கித்தீட்டிவித்தகனிழைத்தநித்திலக்கோவை யில், ஆணிச்சொன்மணி அவிரொளிப்பிழம்பில் அவ்வம்மணிச்சுடர் ஆய்தலோர் கலேயாம். இதனை நன்கறிந்தும் வணக்கப்பொருளைத் தெண்டனின் வேறாய் இணக்கி முதனுரை எழுதிய ஆசிரியர், தாம் முன் வேடனை நிறுத்தி வேந்தனை வீழ்த்திய வழுவைத் திருத்த விழைவா ராயினர். துலேயல்லார்கண்ணும் தோல்விகொளுஞ் சால்பினை மறந்து, தம்மவர்கொள்கையை எவ்வாறயினும் கம்பர்வாய்ப்புகுத் தும் விருப்பமேலீட்டால் வீணே சொற்போர்விளக்கத் துணிந்த னர். ஒருவரை ஒருவர் காண்டொறும்பன்முறைமாறிமாறிவிழுந்து வணங்கும் ஒருவகைமரபைத் தம் கண்கொண்டு கம்பர்கவியினுள் காணலாயினர். கம்பரே தென்கலேமரபினராயினும், கதைவர லாற்றுநிரலில் முதனூல்வரன்முறைமரபுகள் முரண்பட மாற்று முரிமை அவருக்குமில்லே. "தேவபாடையில் இக்கதைசெய்தவர் மூவருள்ளும் முந்திய நாவினர் (ஆதிகவி) உரையின்படி நான் தமிழ்ப்பாவினு லிதுணர்த்திய பண்"பெனவிளக்கிய கம்பரே வான் மீகருக்கு முற்றும் முரணுய் எதுவுங் கூருரன்றே. "குகன் பூசைப் பொருளொடுவந்து, பரதனைக் காண அநுமதிபெற்று, அணுகி வணங்கினன். பரதனே குகன் பிரார்த்தனைக்கிரங்கித் தரிசனம் தந்து, அவன் சத்காரத்தையும் ஏற்றுக்கொண்டான்" என்பதே ஈண்டு முனிவர் வான்மீகர் மொழியும் வரலாறு. இதில் உலகிய லொழுக்கறிவை யிழித்து, அறிவனூற்பொருளறிவால் குகனைப் பெருமாளாக்கிப் பரதனை அவனடிபணியு மாழ்வானுக்குங் கருத் தைப் புகுத்தற் கிடமில்லே. இதைத் தமிழிற்கூறும் கம்பர்கவியுள்

வான்மீகர்கருத்தை மறுத்துப் பிறிதொரு புதுக்கோள்புகுத்தலே அறிவனூற்பொருளறமாயின், வான்மீகரோடு நாமு மச்சிறப்பை இழக்கத்தடையில்லை. அறிவனூற்பொருள் அனைத்தும் தமக்கே தனிச்சிறப்பாக்கும் ஆசிரியரவர்களின் சமயத்தருக்குச்சண்டையில் நமக்கு இடமும் எண்ணமும் சிறிதுமில்லை.

இன்னும், வணக்கமே மண்ணில்விழுதலாமெனில், ஆசிரியர் முதனுரையிற்சொன்ன குகன் இறுதிவீழ்ச்சி இரண்டு, மறுமொழியில் திருத்தஉரையாற் புகுத்தும் முதற்றவைவீழ்ச்சியொன்று, ஆகக் குகன் தரைவீழ்வதே மூன்றாகும்; இடையிற் பரதனும் விழுவனேல், விழுந்தெழுந்தது நான்முறையாகும். கம்பர் கவியி லித்தனைதெண்டனுக் கிடம் தேடுமுபற்சி வான்முயற்கொம்பை வாதிற்காட்டும் வம்பாய்வளரும். அன்றியும், ஆசிரியர் பேணுமரபினை லளப்பின், பாகவதரிருவருள் முறைக்குமுறை எதிர்வணக்கமுரியதாகும். குகன் மும்முறைவீழவும், பரதன் ஒருதரம்விழுந்தபின் மீட்டு மண்விழாக்குற்றம் வேடப்பெருமாளடி தன்முடியிற் சூடவிழையு மாழ்வானுக ஆசிரியராக்கும் பரதனை விட்டபாடில்லை.

இனி, ஏதோ உலகியலொழுக்குக்கு மாறான பாகவததருமம் "அறிவனூற்பொரு"ளாவதுபோலவும், அதனறிவு ஆசிரியரது தனியுடைமைபோலவும், அதையவரெழுதும் விரிவுரைகளைப்படித்தால்மட்டும் உணரலாமெனவும், அவ்வாறு படியாமையாலும் அறிவனூற்பொருளுணராமையாலுமே அவர்கள் அறிவனூற்பொருள்தழுவி எழுதும் விழுமியஉரைநயம் அறியொணுதெனவும், மறுமொழியுரையிற் பெறவைக்கிருர்கள். அவர்கள்சிறப்பை மறுப்பதென்விருப்பமன்று. எனினும், இவர்களே தம் மறுமொழியில், உலகியலோடு தகுதியும்நோக்கிக் குகன் பரதனின் அடியினில் விழுந்தானெனத் திருத்திக்கூறுவதால், உலகியலின்வேறான தகுதி அறிவனூன்மரபாதல்வேண்டும். அவ்வறிவனூன்மரபும் உலகொழுக்கோடு மாறுபடாமல் ஒருங்குநின்று குகனைப் பரதனின் அடிவீழ்த்திற்றே. அதன்பிறகு உலகியலொழுக்கம் தகுதியான அறிவனூன்மரபொடு முரணி யிழுக்குமென் றதனை யிழிக்க

வேண்டுவதேன்? உலகியல்நடையில் நன்மையும் தீமையும்உறழ்தல் கூடும். எனில், ஒழுக்கம் என்று முயர்வின்வழித்தன்றே. ஒழுக்கம் என்றபின், அதில் இழிவுகருத இடமுமுண்டோ?

அன்றியும், அன்பின் நிரை உரை எம்மனோர் அறிவி லடங்கா தென்றும், அன்புவினை பிறருக்கு அருவருப்பாயினும் அறிவ னாலறிவா லவை உயரறமாமென்றும், அதை நிறுவச்சில கதையும் காட்டிக் கூறுகின்றனர். அறிவாலே கண்டபிழை அன்பாலே கொண்டுவிழை சால்பென்னில், அதில்விளையும் தீமைகளுக் களவிராது. அன்பு உயர்ந்த ஒழுக்கறமும் அழகுமாகும்—என்பதிலே ஐயமில்லை. செம்பொருளில் விளைகாதல் சிறப்பும்செய்யும். "என்பும் பிறர்க்குரியாரன்பு மிக எழிலுடைத்து. ஆனு லறமிழித் தாரறி வழிக்கும் அன்பை அறிவார்ந்த மதம் கொள்ளாது. பேரன்பால் வேறுபல கொலை-களவு-பொய்-வஞ்சம்-புரிவதுவும் சமயமெனக் கூறுவது, சமயத்தோ டறிவிற்கும் சாலாது. பழியெல்லாம் யாதாமோர் அன்பினிலே விளைவதாகும். அவ்வவர்க்கு அவரன்பு சிறந்ததெனச் சமயப்பேர் சொல்லிப் பேணில், அறத்தினிலை என்னுகும்? அறமுரானுங் கடவுளருளியல்தான் என்னும்? கடவுண்மறுத் தன்பின்றி அறமழித்த சழக்கர்மலிகாலத்தில், அன்புயர்வை வலி யுறுத்தவந்த கதை நல்லனவோ டல்லனவும் பலநிலவும்; அவை யனைத்தும் சரியென்ப தறிவுடைமைக் கடுப்பதாமா? நிற்க.

மேலும், மக்களறிவு வளராக்காலைப் புக்க பழங்கதைகளெலாம் அறிவனூற்பொருளென்னல் புலமைநிரம்பிய நடுநிலையாளர்க்குப் பொருந்துவதன்றே. எதையும் சரிபெனக்காட்டும் தருக்கம் யாவராலும் வெறுத்தற்குரியது. அன்புருவாகிய கடவு ளருளொடு படைத்த உலகைத் துன்பமாய்க்காணும் துயரம் அறிவுடைமக்கட் கறவுணர்வாமா? இகவாழ்வில் அறவொழுக்காவதொன்று பரவாழ் வுக்குதவாத பாவம்போலும், உலகொழுக்கில் பழியாகும் குற்றங் கள் மறுமையிலே வீடுதரத்தகுவபோலும், சமயப்போர்ல் தழுவிக் கூறுவது அறிவனூலறமாமா? பழியாம்பழையன ஒழிதற்குரியன வன்றோ? பாவத்தை நன்மையெனும் மனப்பான்மையோர் அறமா? நிற்க.

இனி, "எதிரேதொழுதான்" என்பது முன் திசைநோக்கித் தொழுத பரதனைச் சுட்டுமெனும் ஆசிரியர்கூற்றும் இடம்நோக்கி யிப்பாட்டுக்குப் பொருந்தாது. பலபாட்டுக்குமுன், தேரினின் றிழிந்து கங்கைவடகரையுறுங்கால், இராமன்சென்றதிசைநோக்கிப் பரதன்தொழுததை அங்குக் கூறுதல் அமையும். பிறகு குகன் வந்து பரதன் அநுமதிபெற்று அவன்முன்வந்து பணிந்ததைக் கூறு மிப்பாட்டில், முன் பரதன் திசைநோக்கித்தொழுததை இழுக்க ஏதுவில்லை. இங்குத் தொழுததைப் பரதன்வினையாக்கி, அன்வாத மவனைத் தொழுங்கையனுக்கில், குகனுக் கெதிர்வணக்கமுதலிய செயல்களாலது பிறகிடையறவுறுமே என்று நான் எடுத்துக்காட்டினேன். அதனாலும், 'வந்துதனைத்தொழுவானை,' அல்லது 'வந்து திசைதொழுவானை' என்னுமலும், "வாளா தொழுவானை" என்னுமலும், "எதிரே தொழுதானை" என்றடையடுத்துக் கூறினதாலும், அது வந்த குகன் தொழுததையே குறிக்குமென்று விளக்கினேன். பரதனை வந்தெதிர்ந்தவன் குகனே. பரதன் இடம்பெயர்ந்தெதிர்ந் தவனல்லன். உயர்ந்தோர்முன்வரும் தாழ்ந்தோர், தொழுதெதிர்த லே அறமுறையும் வழக்குமாம். வாளா வந்து மரம்போல்நின்று பிறகுசிறிது வணங்கல்மடமை அல்லது மதர்ப்பின்குறியாகும். இவ் விடத்தில் வான்மீகரும் குகன் பூசைப்பொருளொடுவந்து, பரதனை அணுகி வணங்க அநுமதிபெற்று, தரிசனம்செய்து மகிழ்ந்தான்.— என விசதமாக்கியுள்ளார். அதற்கேற்பத் தொழுதெதிரும் குகனைக் குறித்தே "வந்தெதிரேதொழுதானை" எனக் கம்பரும் கூறினராதல் வேண்டும். அன்றேல் "எதிரே" எனு மடை பொருளற்றதாம். பரதன் தொழ இராம னுண்டில்லை. குகனைப் பரதன் எதிரவுமில்லை. அதனால் தொழுதெதிர்ந்தவன் குகனன்றிப் பரதனாகான். ஆதலின் தொழுதவன் குகன்; அதன்மேல் அத்தொழுகையை ஏற்று வணங்கி னவன் பரதன், என்பதைத் தெளிய விளக்கினேன். அதற்கு ஆசிரியர் மறுமொழியில் "எதிரே" என்ற சொல்லால் இடையறவும் சேய்மைநிலையும் என்கூற்றினு முளவாமென்கிறார்கள். முன் திசை நோக்கித்தொழுத பரதனை "இப்பாட்டினும் "தொழுதானை" எனக் கொள்வதற்கு இடையறவு தடையாகும். இங்குத் தொழுதெதிர் பவன் குகனாகவே, இடையறவு என்னுரைக்குத் தடையாகாதே.

இனி, தொழுதலும், வணங்கலும், அடிவீழாமல் ஒருவருக்கு ஒருவர் கண்டாங்குச் செய்யும் உலகமரியாதையாகும். என்னுரையில் முதலிற் றெழுதெதிர்ந்தவன் குகன்; அதற் கெதிர்வணக்கஞ் செய்தவன் பரதன், அதன்மேல் பரதன்காலில் குகன்விழுந்தான்; பரத னவனை எடுத்துத் தழுவினன்;-என்று விளக்கினேன். அதற்கு மறுமொழியில் ஆசிரியர்கூறும் மறுப்பிது:—"முதலில் அவனெனச் சுட்டப்பட்டவன் குகனெனக்கொள்ளில், அவனடிவீழ்ந்தான் என்பதற்குக் குகன் பரதனடியிலே விழுந்தான் என்றே பொருள் கொள்ளவேண்டும். (அவ்வாறே நான்பொருள்கொண்டேன்.) அப்பொருள் வந்தெதிரேதொழுதான் என்ற அளவில், தகுதி நோக்கி அடிவீழ்ந்து தொழுதான் என்று பெறப்பட்டாய் விட்டது. அதனை மறித்தும் உரைத்தல் வேண்டாதுகூறல்; கூறியதுகூறலுமாம்". இஃ தென்னுரையில் ஆசிரியர்காட்டும் குற்றம். தொழுதானை என்ற அளவில், பரதனின் அடிவீழ்ந்து குகன் தொழுதான் என்று பெறப்பட்டதெப்படி? வீழாது வாளா வணங்கி எதிர்ந்த குகன்செயல் தொழுதலென்பதே என்னுரை. விழுதலே தொழுதலென்பது ஆசிரியர் புத்துரை. வாதத்துக்கு வேண்டும்போது முன்சொன்னதை மாற்றித் திருத்தமெனச் சாற்றுந் துணிவு என்போலெளிய "மாணவன்நிலையில்" எழுவதன்று; அளவைநூலோடு அறிவனூலளந்து "கற்றுவல்ல தம்புலமைத் திறமைகொண்டு பெரும்புலவர் குழுவிடைப்பேசும் விரிவுரையாளராம்" பத்திராசிரியர்போன்ற பெரியார்க்கே அஃது உரியதாகும். முதலுரையில் வாளா வணக்கமென்றதை, "மறுமொழியில் "வணங்கினன் என்பதற்கு விழுந்து கும்பிட்டான் என்பதே பொருள்;........மண்ணிடைவீழ்ந்த வணக்கமென்று அதைத் திருத்திக்கொள்ளவுங்கூடும்" என்று கூறுகிறார்கள். இத்திருத்த உரையே, என்பாற்காட்டும் குற்றத்திற் கவர்களை முற்று மாளாக்கும். முதல்வணக்கமே மண்மேல்விழுந்த கும்பிடாகுமேல், இறுதியில் இன்னும் இருமுறை பரதன்காலில் குகன் விழுவானேன்? நானோ, குகன்தொழுகையும் பரதன்வணக்கமும் மண்ணில்வீழாப் பொதுமரியாதையென்றேன். நான்சொன்னதை மாற்றித் தன்னுரையேற்றிப் பின் னதிற் குற்றம்பேசுதலால் வரும் பிழையும் பீழையும் என்பாலெய்தற் கிடமில்லையே?

இனி, தொழுதகுகனைப் பாதன் வணங்கினுன் என்பதே மாருத என்கூற்ருகும். உண்மை யிதுவாக, ஆசிரியர் மறுமொழியில் "தாழ்ந்தசாதியினனுன குகனை உயர்ந்தசாதியினனுன பாதன் வணங்கினுன் என்று கூறுவது தவருமென்று" நான் உரைத்தது போலப் புனைந்துகொள்ளுகிருர்கள். அவ்வாறு புனைந்துகூறிக்கொண்டு, "தாழ்ந்தோரை உயர்ந்தோர் வணங்குவதே தவறென்னும் நான், மானிடப்பரதனைத் தேவர்தொழும் பிரமனும் வணங்குமவன் என்று (கவி) கூறும் பொருளை உடம்படுதலால் தம் வழக்கிழந்தவராகிருர்," என வெற்றிச்சங்கூதுகிருர்கள். முதலில் பரதனைப் பிரமன் வணங்கினதாய்ப் பாட்டிலில்லை; சால்பால் வணங்கத் தகுவோன் என்பதே பாட்டு. இனி, மேலோர் தம்மிற் ருழ்ந்தவரெவரையும் வணங்கல் தவறென யாண்டும் நான் கூறவில்லையே? தாழ்ந்த வேடனை உயர்ந்த பரதனும் வணங்கினுனென்பதன்றே என்னுரையாகும். "எப்போதும் உயர்ந்தோரைத் தாழ்ந்தோர் வணங்குதலும், தாழ்ந்தோரை உயர்ந்தோர் வாழ்த்துதலுமே முறை. இம்முறையன்றி..........முறையே தாழ்ந்தோனு முயர்ந்தோனுமாகிய குக பரதரிருவரும் ஒருவரை ஒருவர் வணங்கினுர் என்று கவிக்கூற்றிருத்தலால், உலகியல்வழக்கில் கவிகருத்தில்லை என்பது வெளிப்படை. ஆகவே.........பாகவததர்மத்திலே கவிக்கருத்துள்ளதாயிற்று," என்று முடித்து என்னை வென்று மகிழ்கிருர்கள். "தமைப் பிறர் வணங்கினும் தாம் எதிர்வணங்காமல் வாழ்த்தியமையுஞ் செருக்கு ஆரியருள் முதல்வருணத்தாரின் தனிப்பெருமை. பொதுவாக மற்றை யாவருள்ளும், சிறப்பாகத் தமிழருள்ளும், எனைத்துயர்மேலோரும் தமைத்தொழுபவரை அவர் யாவரேயாயினும் எதிர்வணங்காமை இழுமைப்பெனப்படும். கீழோர் வணங்கினும் வாழ்த்துவதோடு வணக்கமும் தருவதே தமிழ்ப்பெரியோர் பேரறமும் அடிப்பட்ட வழக்குமாகும். கும்பிட்டவர்க்கெதிர் கைகுவியாரைச் சான்ருேராகத் தமிழர்கொள்ளார். எனவே, நான் சொல்லாததைத் தாம் படைத்துக்கொண்டு, அதனையழித்துப் பெருமிதம்கொள்வரேல், அதைத் தடுப்ப தெவ்வாறு? நிற்க.

இனி, "இராமன் அவதாரபுருஷன் அல்லனென்றும், குகன் பாதன்முதலினோ ரவனைக் கடவுளென்று அறியவில்லை என்றும், அவதாரக்கற்பனை பிற்காலவழக்கென்றும் தமக்குத்தோன்றியவாறு பலமுடிபொருள்கூறி" (என்னால்) எதிருரை எழுதப்பட்டிருப்பதாய் ஆசிரியர் மறுமொழியில் பேசுகிறார்கள். என்னுரையில் நான் சொன்னவற்றைச் சிறி தாராய்வோம். "இராமனுக்குப்பிறகு இராமவழிபாடு எழுந்ததாகும்" என்றேன். இதில் தவறுண்டா? அவதாரத்தின்பிறகு தானே அவ்வவதாரமூர்த்தியின் வழிபாடு மக்களிடை வழங்கல்கூடும். இனி, "இராமனை அவன்காலமக்கள் கடவுளெனக்கொண்டு வழிபட்டா ரென ஆதிகாவியத்தில் ஏதளவும் சொல்லவுமில்லை," என்றேன். இது தவறாயின், வான்மீகர்வாக்கியத்தை எடுத்துக்காட்டி யென்னைத் திருத்தல் கூடும். இன்னும், "அவன்காலமக்கள் அவன் கடவுளென அறிந்திருப்பின் அவ்வவதாரநோக்கமே அழிந்துவிடும். இராமன்மாட்சி மக்கள் மனத்தொடு அன்பெல்லாம் தனதுகொண்ட நற்செய்தியன்றோ அவனவதாரப்பெருமையும் பயனும் சிறக்கச்செய்யும்; கடவுளென்றறியிற் கடையரும்வணங்கி இடையறாப்பூசை இயற்றுவரன்றோ? இராமனைப் பகவனாகக்கொண்ட பிற்காலப் பாகவதர் தம்நோக்கால் அப்பெரியானை (இராமனை)ப்பணிந்து அன்புபண்ணியபுண்ணியரைப் பரமபாகவதராகக் கருதுவதுஇயல்பு" என்றேன். இக்கூற்றுக்களில் இராமன் அவதாரபுருஷனல்லன் என்பது தோன்றுகிறதா? "கடவுளென அவனை அவன்காலமக்கள் அறிந்திருப்பின் அவதாரநோக்கமே அழிந்துவிடும்" எனவும் "அவனவதாரப்பெருமை சிறக்கு"மெனவும் நான் சொன்னதனாலேயே, அவதாரத்தை மறுக்காமல், அவனவதாரம் தேவஇரகசியமாகவே அதன் நோக்கநிறைவேறுமுன்னே மக்களறையாது மறையாய்நிற்கும் என்பதன்றோ என்கூற்று. அது தவறாயின்,தேவரு முனிவரு மல்லாமல் அவன் காலப் பொதுமக்கள் இராமனைக் கடவுளெனக் கண்டறிந்த உண்மை காட்டும் நற்சான்று வான்மீகர், கம்பர், செய்யுட்களில் கவிக்கருத்தாகாமல் வரலாற்றுமுறையில் உள்ளன எடுத்துக்காட்டி என்னைத் திருத்தலாமே? அவ்வாறு அறவாத நல்லநெறிசெல்லாமல், நேர்மையினால் வெல்ல வகை ஒல்லாமல் சொல்லாத பொய்சுமத்தி இல்லாத அபவாதம் புனைந்துசூட்டி எல்லார்க்கும் பொல்லானு யென்னைக்காட்ட முயலுவானேன்?

இனி, "பாதனே அரசனுகக்கருதும் கருத்து உலகியல்வழக்குடைய பிறருக்குள்ளதேயன்றி, பாதனுக்கேனும் அல்லது இராமாவதார நூலியற்றிய புலவர்பெருமானுக்கேனும் உள்ளதாகுமா? என்று வினவி, அவனை அரசனெனச்சொல்பவரை யிகழ்கிறார்கள். இவர்களே, முதலுரையில், "பாதாழ்வானுடைய பிரபாவமறியாமையாலே ராஜகுமாரன் என்பதுபற்றி, வேடனுன நிலைகொண்டு குகன் வணங்கினுன் என்கிறார்கள். கம்பரினும் பெரிய கவி வான்மீக ரப்படியே கருதுகிறார். ஆகவே, வான்மீகக்கவிமுனியும், குகப்பெருமாள்தானும், அறிவனூலனைத்தையுந் தாமளந் தெல்லைகண்ட செந்தமிழாசிரியரும் அரசனெனக்கருதின பாதன், அறிவருக்கும் அயோத்திக்கு மரசன். அவனைக் கம்பரும், என்போல் எளிய மாணவரும் அரசனெனில், எழும் பெரியகுற்ற மென்ன?

இனி, "சாதி முதலியவற்றின் வேற்றுமை கருதாதொழுகவிரும்பு மிக்காலத்தில், அவ்வேற்றுமைகருதி ஒழுக்கம் நிறுவும் "என் மனப்பான்மை பாராட்டத்தக்கதே" என் றென்னைத் தட்டிக்கொடுத்து முதுகு தடவுகிறார்கள். இதுவும் நான் சொல்லா தவர்கள்செய்த கற்பனைகளுள் ஒன்று. ஆசிரியர் இங்கு "முதலிய" என்பதால் நுதலியவற்றை விளக்கவில்லை. பிறப்பால்மட்டும் என்றும் உயர்வுதாழ்வுடையசாதிபேதம் அறவே தவறு என்பதும், மற்றும் ஒழுக்கம் கல்வி யறிவு பதவி நன்முயற்சி சால்புகளால் வேறுபாடுண்மையை மறுக்கொணாதென்பதும், எனது நிலைத்த எண்ணம். சாதிமட்டுங் கருதிக் குகன்காலில் பாதனைவீழ்த்தும் புதியகொள்கையை நான் எதிர்த்தேனல்லேன். பிறப்பொடு சிறப்பால் யாரினுமுயர்ந்த பாதவேந்தனை வான்மீகர்கூறும் கொலைத்தொழிற் குகவேடனின்காலில் வீழ்த்த விரும்புவோர், வேறு கதை எழுதல்வேண்டும். கம்பர் பழந்தமிழ்க்கவியுள்ளே தங்கோளைப் புகுத்துவது தவறாகும். குகன் இராமனுக்குச் "சரிஜோடியான ஒப்பு.............பாமசாம்யன்" அதனுல் இராமனுக்கிளைய பாதன் குகனைவணங்கல் முறையெனக் காட்டமுயலுகிறார்கள். இராமனுக்கு மூத்தவராய் அவன்பாலன்புமிக்கவராய் அனுமார் சுமந்திரன்போல்வார் பலருளர். அவரையெல்லாம் பாத னிறைஞ்சி மடிபணியவைப்பதெனில் நகைபிழை நாடகமாக முடிவதாகும். "இராமசாம்ய" அரசரும் துணைவருமான வீடணர் பாதனைத் தொழ, அவரை அவன் தழுவினன் என்பர் வான்மீகர். கம்பரும் அவ்

வாறே கூறுகின்றார். வயதால் இராமனுக்குக் குகன் "ஜோடி" (ஒப்பு) ஆதல்கூடும். "ஆயிரம் இராமர் நின்கே"ளாகாரெனக் குகனும், 'எண்ணில் கோடி இராமர்களென்னினும்' சால்பினும் அன்பினும் இணையாகாரெனக் கோசலையும் புகழும் பரதனைத் "தருமத்தின்தேவும்-செம்மையினுணியு" மாக இராமனும் பாராட்ட, ஆசிரியர் தம் அறிவனூலறிவா லளந்து பாகவதபாவத்தில் அவன் குகனடிதொழுதற்கே உரியனென்கிறார்கள். ஏதோ ஒருசிலர் மனத்தால் பரதனைக் குகன்காலில் வீழ்த்தி மகிழ விரும்பில் தடுப்பவர் யாருமில்லை. எனில், தங்கொள்கையைத் தழுக் கடித்துச் சங்கூத அறமறிந்த தமிழ்க்கவியை ஆட்பிடிக்கமுயற்சிப்பாரை வாளா பார்த்திருக்கும் தமிழனுண்டோ? நிற்க.

ஆரியகொள்கை அறிவனூலஃசானுகிய பத்திராசிரியர், கம்பர்கவிக் கருத்தாயும் என்மேற் காய்ந்து, விதண்டைகளைப் படைத்தேவப் பயிலு வானேன்? அறிவனூற்கடல் ஒருவி அதனுழம் பரப்பெல்லா மளந்தரிய எல்லைகண்டு மறுகரையேறிய ஆசிரியர்க்கு வயதோடு வளர்ந்து முதிரு மறிவும், வம்பகல் அகன்று மலர்ந்தடங்கிய அறவுள்ளமும் அழகு செய்யும். பொல்லாங்கு நல்லதெனச்சொல்லி வெல்லும் புரைத்தருக்கப் பயிற்சியோடு, சொல்லாடவொண்ணாத மாணவரை வாயடக்கும் "அண் ணுவிப்பரிசும் வளர்நெடுவாழ்வில் எதிர்ப்பொல்லா மனப்பான்மை நேர்ந்ததொன்று; சமயமயற் பெருமிதத்தால் தம்மவர்கோள்கொள் ளாரை இகழுமுளத்தியலொன்று; ஆக இருபரிசாலும் நடுநிலைநல்லற ...வா தமிடும் திறம்காட்டி மறுமொழியை எழுதினார்கள். தத்தமனம் உத்தமமாய்க்கருதுவதைப் பிறருரிமையழியாமல் தம்மளவில் கொள்ளு வதைப் பிறர்தடுக்க எண்ணமாட்டார். சாதிபேதம் பிறப்பளவில் வேதி யர்க்கு விருப்பானுல், அவரளவி லதையாள உரிமையுண்டு. வேறுபடும் வருணவகையும் வரிசையுரிமை வேறுபாடும் முன் ஆரியருக்கு அவசிய மும் அறிவும் தந்த அறமாகலாம். அத்துறையி லதையிகழ்வார் யாரு மில்லை. எனில், அவர் வருணவகுப்பைத் தமிழ்மொழியிற் கூறும் தொல் காப்பியர்சூத்திரத்துள்ளும், அனைவருக்கும் ஒத்த பொது அறங்கூறும் வள்ளுவர்குறளுள்ளும் புகுத்தி உரைவகுக்கமுயலு மனப்பான்மை அறவோர்க்கு வெறுப்பை ஊட்டும். அதுவேபோல, ஒருவகையார் தமது மதமரபுகளைச் சிறந்ததெனப் பேணுவது இயல்பாகும். எனில்,

அவர்கொள்கை ஒவ்வாதார் அறிவிலார் எனத் தருக்கமிடுதருக்கு மிக வெறுக்கற்பாற்றும். தம்வகுப்பார் பேணுவனவே அறிவனூல்கள்; பிறவெல்லாம் தாழ்ந்த உலகியற்பொருளும் புல்லறிவுமாமென்று கூசாது பேசுவது குறுநோக்கார் குதர்க்கமாகும். அறி வொருவர் தனியுரிமை யாகாது; ஒருமதத்தார்க்குடைப்பொருளா யமைவதன்று. மண்ணுலகில் எண்ணகிலா மதங்களிடை ஆசிரியர்கொள்கையினர்தொகை என்னும். வைணவர்தம் சிறுதொகையுள் மிகச் சிறியபகுதியன்றே? இவருள்ளும் பெரியாரை அவ்வவர்தம் உயரொழுக்கம் செயற்பரிசால் பிறர் மதிப்பர். அன்றியும், ஒழுக்கறம் அனைவருக்கும் ஒன்றேயாகும். சடங்குகளும் மரபுகளும் பலவாறு வேறுபட லியல்பாம். எனில், அநுட்டானம் அறஒழுக்கமாய்விடாது. அதுபற்றி வாதமிட விருப்பமில்லை; எனில், வீண்குதர்க்க எதிர்ப்பஞ்சல் என்னளவில் வழக்கமில்லை.

ச. சோமசுந்தரபாரதி.

12—11—'41.

---

௨

## ‘வந்தெதிரேதொழுதானை’ என்ற பாட்டின்

# பழையவுரையும் புதியவுரையும்

(செந்தமிழ்த்தொகுதி ௩௮-ல் ௪௮௩—௫௨௦ பக்கங்களைப் பார்க்க.)

தலைப்பிற் குறித்த பாட்டு வருமாறு:—

வந்தெதிரே தொழுதானை வணங்கினன் மலரிருந்த
அந்தணனுந் தனைவணங்கு மவனுமவ னடிவீழ்ந்தான்
தந்தையினுங் களிகூரத் தழுவினன் தகவுடையோர்
சிந்தையினுஞ் சென்னியினும் வீற்றிருக்குஞ் சீர்த்தியான்.

பழையவுரைக்கருத்து, கைகூப்பித்தொழுதுகொண்டு தன்னெதிரேவந்த குகனைப் பரதன் கைகூப்பித்தொழுதான். குகன் பரதன்காலில் விழுந்து தெண்டனிட்டான். பரதன் குகனைத் தழுவினன் என்பது.

புதியவுரைக்கருத்து, குகன், தன்னெதிரே கைகூப்பித் தொழுத பரதனைக் காலில்விழுந்து தெண்டனிட்டான். பரதனும் குகன்காலில்விழுந்து தெண்டனிட்டான். குகன் பரதனைத் தழுவினன் என்பது.

‘வணங்கினன்’ என்பதற்குக் ‘கைகூப்பித்தொழுதான்’ என்பது கருத்தாகப் பழையவுரையும், ‘காலில்விழுந்து தெண்டனிட்டான்’ என்பது கருத்தாகப் புதியவுரையும் கொண்டிருக்கின்றன.

‘கைகூப்பித்தொழுதான்’ என்ற பொருள் கம்பர்கருதியதாயிருந்தால், பழையவுரை சரியானதாம். ‘காலில்விழுந்து கும்பிட்டான்’ என்பது அவர்கருதியதாயிருந்தால், புதியவுரை சரியானதாம்.

‘கைகூப்பித்தொழுதல்’, ‘காலில்விழுந்து தெண்டன்சமர்ப்பித்தல்’ என்ற இரண்டுபொருள்களுமுடைய பொதுவினைகளாகிய ‘தொழுதல்’ ‘வணங்கல்’ என்பவை, இந்தப் பாட்டிற்போல் வேறே

கம்பர்பாட்டு எதிலாயினும் வந்து, அந்தப்பாட்டில், இந்தப்பாட்டிற் போலன்றித் தெளிவாகப் பொருள்படுவனவாயிருந்தால், அந்தப் பாட்டைக்கொண்டு, இந்தப்பாட்டுக்குப் பழையவுரை சரியானதா? புதியவுரை சரியானதா? என்று துணியலாம். அப்படிப்பட்ட பாட்டு, கம்பராமாயணத்தில் மந்திரப்படலத்திற் காணப்படுகின்றது. அது வருமாறு:—

"முறைமையி னெய்தினர் முந்தி யந்தமில்
அறிவனை வணங்கித்தம் மரசைக் கைதொழு
திறையிடை வரன்முறை யேறி யேற்றசொற்
றுறையறி பெருமையா னருளுஞ் சூடினர்"

திரு. வை. மு. கோபாலக்ருஷ்ணமாசாரியரவர்கள் இப்பாட்டுக்கெழுதியிருக்கிற உரையில், '.........அவ்வமைச்சர்கள்........... வசிட்டமாமுனிவனைப் பணிந்து (தண்டனிட்டு)... ............தம்மிறைவனைக் கையாற்றொழுது (அஞ்சலிசெய்து)...........' என்று பொருள்வரைந்திருக்கின்றார்கள். அவர்கள் அவ்வுரையின்கீழே, "வந்தவர்கள் வசிட்டபகவானுக்குத் தண்டன்சமர்ப்பித்துச் சக்கரவர்த்திக்கு அஞ்சலிபண்ணினர்க ளென்பதுதோன்ற 'வணங்கி' என்றும், 'கைதொழுது' என்றும் கூறினர்"—என்று விசேடவுரையெழுதியிருக்கின்றார்கள்.

புதியவுரையில், வேடக்குகன் வேந்தப்பரதனைத் 'தந்தையினும் களிகூரத்தழுவிய'தாகக் கூறியிருப்பது தவறானல், பழையவுரையில் 'இன்துணைவன் இராகவனுக் கிலக்குவற்கும் இளையவற்கும் எனக்கும் மூத்தான்' என்று குகனைப்பற்றிக்கூறிய தம்பிப் பரதன் தமையக்குகனைத் 'தந்தையினும் களிகூரத்தழுவி'யதாகக் கூறியிருப்பதும் தவறும்.

கம்பராமாயணசாரம் அயோத்தியாகாண்டத்தில் 181—182-ஆம் பக்கங்களில் வெளியாயிருக்கிற இப்பாட்டின் உரையின் இறுதிப்பகுதியை இதன்கீழ்த் தந்து இந்தக்கட்டுரையை முடிக்கின்றேன்.

வேந்தர்குலத்தினனான பரதன் வேடர்குலத்தவனான குகனை அடிபணிதல் தகாததன்று (தக்கதே) என உய்த்துணரவைப்பாராய்ப் பிராமணர்தலைவனாயிருத்தலன்றித் தேவதேவரான மூவ

ருள்ளேயே ஒருவனுயுள்ள 'மலரிருந்த அந்தணனும் தனைவணங் கும் அவனும்' எனப் பரதனை விசேடித்தாரென்க.

மூத்த வேட்டுவக்குகன்காலில் இளைய கோப்பரதன் வீழ்ந்தது வேளாண்குலத்து முதிய அப்பமூர்த்திகாலில் விப்பிரகுலத்துப் பிள்ளைப்பருவச் சம்பந்தமூர்த்தி வீழ்ந்ததுபோலத் தக்கசெயலேயா மென்க. (பெரியபுராணத்துத் திருநாவுக்கரசுநாயனார்புராணம் ருகூஎ-ஆம் பாட்டைப் பார்க்க.)

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்,
10—11—'41.

---

## பிற்குறிப்பு

செந்தமிழ்த்தொகுதி ருஅ-ல் சஅச-ஆம் பக்கத்தில் 'கடவுட்கொள்கையயே மடனெனப்பழித்து வரிசையும் தாமும் வாழ்க்கைவேற்றுமைகளும் அறவே ஒழித்து மகிழும் மற்றொரு சாரார், பழம்பாட்டுக்களில் தம் புதுக்கோள்புகுத்தும் கருத்தோடு இவ்வுரை கூறுவதும் உண்டு' என்று திரு. S. S. பாரதியவர்கள் கூறுகின்றார்கள். அவர்கள் விவகரிக்கும் 'வந்தெதிரே தொழு தானை' என்ற பாட்டுக்கு நான் புதியவுரையெழுதியிருத்தலால், அவர்கள் 'மற்றொருசாரா'ரில் என்னைச் சேர்த்தெண்ணினர்களோ இல்லையோ என்பது அவர்களுக்கும் கடவுளுக்கும் தெரியும். வேறு யாவரேனும் தெரிவிக்கப்பட்டவர்களிருந்தால், அவர்களுக்கும் தெரிந்திருக்கும். அந்தச் 'சாராரில்' நான் சேர்க்கப்பட்டிருந்தால்,

'என்னுடையோ, என்னணியோ, என்னடையோ, என்மொழியோ
பின்னெதுவோ, தேறேன்; பிறன் என்னைப்—பொய்ந்நிறைசேர்
மாதரைச்சேர் மாதா மயக்கச் செய்து'

என்று அகலிகைவெண்பாநூலில் அகலிகைகூறியவாறு, அப்படிச் சேர்க்கப்பட்டதற்கு என்பேச்சோ, எழுத்தோ, வேறெதுவோ காரணமாயிருக்கவேண்டுமென்று கருதி அமைகின்றேன்.

வெ. ப. சு.

---

உ

## திருக்கோட்டியூர்த்

# திருமாமகள் நாச்சியார் கலிவெண்பா*

1 சீருலவு விண்ணவருஞ் சீதரனும் வாலியுமிப்
பாருலகில் வந்ததிருப் பாற்கடலில் - ஊருரகம்

2 நாணாக மந்தரமே நாட்டி யொருநாளுங்
காணா அமுதங் கடைந்தெடுக்கப் - பூணுள்நீ

3 வந்துதித்த பின்னருன்னை மாயன் மணந்தன்றே
இந்த உலகுக் கிறையானார் - சந்தப்பூ

4 மானே நினதருளின் வண்மையினால் மாமலரோன்
தானே யுலகந் தனைப்படைத்தான் - ஆனேறு

5 பெற்றோனு நின்னருளைப் பெற்றே யுலகனைத்தும்
உற்றோர் கணத்தில் ஒழித்துவிட்டான் - கற்றறிநூற்

6 பாவேந்த ரும்வேற் படைவீர ருங்கடல்சூழ்
பூவேந்த ரும்மதவேள் போல்வாரும் - தேவேந்

7 திரனும்நம னும்வந் திடினும் அதிரா
உரனுடைய சிந்தையுடை யோரும் - திரிகிரணச்

8 சந்த்ரா திபரும் தனபதியும் ஏழ்கோடி
மந்த்ரா திபரும் மறையோரும் - வந்துனது

9 முன்புபணி கின்றார் முறைமையினா லுன்கடைக்கண்
அன்புபெற கின்றா ரவரன்றோ - வெம்புவியூ

10 டாடிய காடுமலை யானாலும் நீயிருந்தாற்
கோடிபொன்னு முத்துங் கொழிக்குமன்றோ - நீடுபரி

---

* இதனையியற்றியவர்பெயர் முதலிய ஒன்றும் தெரியவில்லை. பழைய ஓலைச்சுவடியிலிருந்து சென்னைப்பல்கலைக்கழகத்துத் தமிழாராய்ச்சியாளர் திரு. மு. அருணசலம்பிள்ளை, M.A., அவர்கள் எழுதியனுப்பியபடி வெளியிடலாயிற்று. உதவியாசிரியர்.

11 சந்நாடு நீயிருந்த தன்மையினு லல்லவோ
பொன்னுடென் ருரும் புகல்கின்றூர் - பன்னியநின்

12 பைந்தமிழைத் தார்புனைந்த பத்திரத்தை வைத்திடினும்
அந்தமனை யாள்கையி லா(ெ)மன்றே - செந்திருவே

13 என்று குறுமுனிவ னேத்த அருளருளும்
மன்றல் மலர்க்கமல மாமாதே - வென்றிமதன்

14 தாயேநின் னன்பு தருவாய் பெருவாழ்வு
நீயே துணையென்று நேசித்தேன் - தூயதமிழ்

15 ஆராயுங் கோட்டிநகர் ஆளவந்த மிக்கசொக்க
நாரா யணர்புரத்து நண்ணியே - போரான

16 அந்தரியீ ரேழுலகை ஆண்டதிரு மாமகளாஞ்
சுந்தரிநின் தாளே துணை.

---

# பிழையும் திருத்தமும்

செந்தமிழ் ௩௮-ஆந்தொகுதியின் ௧௦-ஆம் பகுதியில் (நிகழும் விஷு வருட ஆவணிமாதச் செந்தமிழில்) வெளிவந்த மெய்ப்பாடு என்ற பொருளுரையுள்,

௪௯௯-ஆம் பக்கத்து ௨௩-ஆம் வரியில் வருத்தம். என்றிருப்பதை வருத்துந்தேய்வம். என்று திருத்திக்கொள்க.

௪௯௭-ஆம் பக்கத்து ௨௫-ஆம் வரியாகவுள்ள இதுவுமது. என்பதன்பின் கோலை-ஈண்டு வாக்கைக்கோன்றுரைத்தல்.—என்பதைச் சேர்த்துக்கொள்க.

இங்ஙனம்,
சி. கணேசையர்.

---

# இந்தளூர்த் திருமால்கோயிற் கல்வெட்டு

[ஸ்ரீ. வை. சுந்தரேசவாண்டையார், ஆசிரியர், திருவையாறு.]

இந்தளூர் என்பது திருமங்கைமன்னனாற் பாடப்பெற்ற பழமையும் பெருமையும்வாய்ந்த சோழநாட்டுத் திருமால்திருப் பதிகளுள் ஒன்றாகும். இது தஞ்சாவூர்ச்சில்லாவில் திரு*மயிலாடு துறைக்கு அண்மையில் காவிரியின்வடகரைப்பக்கத்தில் இருக் கின்றது. இத்திருக்கோயிலில் இரண்டு கல்வெட்டுக்கள் இருக்கின் றன. அவற்றுள் ஒன்றில் இக்கோயில் "வடகரை ராசாதிராச வளநாட்டு இந்தளூர்நாட்டு இந்தளூர்ப்பெருமாள் மருவினியமைந்தர் கோயில்" என்று குறிக்கப்பெற்றிருக்கிறது. எனவே இத்திருக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் திருமாலின் திருப்பெயர் மருவினிய மைந்தர் என்பதாகும். திருமங்கைமன்னனும் இப்பெயருண்மை யைத் தாம் பாடிய இவ்வூர்ப் பதிகத்தில் 'மருவினியமைந்தா'† என்ற தொடரால் குறிப்பிட்டிருக்கின்றார். இஃது இவ்வாறு இருக்க இக்காலம் இத்திருமாலைச் சுகந்தவனநாதர் என்ற பெயரால் மக்கள் வழங்கிவருகின்றனர். முன்னைப் பெயர் தூய தமிழால் அமைந்திருத்தல் நோக்கி இன்புறற்பாலதாகும்.

இவ்வூரின் பெயர் இந்தளூர் என்பது இக்கல்வெட்டால் அறியக் கிடக்கின்றது. இத் திரு இந்தளூரே இக்காலம் மரூஉமொழியாய்த் திருவழுந்தூர் என்று வழங்கப்பெற்றுவருகின்றது. இவ்வழங்கற் பாடுபற்றியே இவ்வூரைக் கம்பரது பிறப்பகம் எனத்துணிந்தனர் ஒருசிலர். அவர்கள்கொள்கை உண்மையற்றது என்பதை இக் கல்வெட்டு மெய்ப்பிக்கின்றது.

ஆயின், திருவழுந்தூர் யாது எனின் கூறுவன். மாயூரந் தாலூகாவில் மல்லியம் குற்றாலம் என்னும் இரு புகைவண்டி நிலையங்களுக்கும் இடையில் இருக்கும் தேரழுந்தூர்நிலையத்தி

* மயிலாடுதுறை - மாயூரம். † பெரியதிருமொழி. 4. 9. 2.

லிருந்து தென்திசையில் மூன்றுமைல் தொலைவில் திருவழுந்தூர் என்று ஓர் ஊர் இருக்கின்றது. அவ்வூர் சிவநெறிக்குரவராகிய ஆளுடையபிள்ளையாரால் பாடப்பெற்றதாகும். அவ்வூர்த் திருக்கோயிலிற் பல கல்வெட்டுக்கள்* இருக்கின்றன. அவைகளுள் அவ்வூர்ச் சிவபெருமான்திருப்பெயர் திருவழுந்தூர்த் திருமடமுடைய மஹாதேவர் என்றே குறிப்பிடப்பட்டிருக்கின்றது. எனவே அதுவே திருவழுந்தூர் என்பது தெற்றெனப் புலனாகும். இத்திருவழுந்தூரே இக்காலம் தேரழுந்தூர் என்று மக்களால் வழங்கப்படுகிறது.

மேற்குறித்த இருகல்வெட்டுக்களில் ஒன்றினை, யான் எழுதிவந்துளேன். இதுகாறும் தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதிகளில் வெளிவராத அக் கல்வெட்டை ஆராய்ச்சியாளர்க்குப் பயன்படும்படி ஈண்டுக் குறிப்பிடுகின்றேன்.

இடம்:—திருக்கோயிலின் தென்புறம்

மன்னன்:—திரிபுவனச் சக்கரவர்த்திகள் கோனேரின்மை கொண்டான்

---

* இத்திருக்கோயிற் கல்வெட்டுக்களிற் சிலவற்றைச் சில ஆண்டுகளுக்கு முன் எழுதிவந்துளேன். அவைகள் இதுகாறும் தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதிகளில் வெளிவராதவைகள். அவற்றுள் வேண்டிய அளவு ஈண்டுக் குறிப்பிடுகின்றேன்.

இடம்:—மகாமண்டபத்தின் தென்புறம்.

(1) சுவஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீகுலோத்துங்கசோழ தேவற்கு யாண்டு ரு-வதின் எதிரா

(2) மாண்டு சிம்ஹநாயற்று அபரபக்ஷத்து துதியையும் புதன்கிழமையும் பெற்ற அசுவதிநாள் ஜ

(3) யங்கொண்ட சோழவளநாட்டு திருவழுந்தூர்நாட்டு பிர்மதேயம் உடையார் திருமடமுடை

(4) டயநாயனர்க்கு இந்நாயனர் அடியாரில் சிற்றம்பலமுடையான் பொன்னன்............என்று தொடர்கிறது.

இடம்:—அர்த்தமண்டபத்தின் நிலைக்கல்லில் தென்புறம்.

சுவஸ்திஸ்ரீ குலோத்துங்கசோழதேவற்கு யாண்டு ஙசஅ-வது திருவழுந்தூர் திருமடைமுடையார் மகாதேவர் கோயிலில்—........என்று தொடர்கின்றது.

காலம்:—அரியணையேறிய 17-வது ஆண்டு, நாள் இருநூற்றறுபது.

1. சுவஸ்திஸ்ரீ யாண்டு கஎ-வது நாள் இருநூற்றறுபதினால் திரிபுவன சக்கரவர்த்திகள் கோனேரின்மை

2. கொண்டான் ராஜாயிராஜ வளநாட்டு கஞ்சானகரத்து நாயனார் அழகப்பெருமாள்கோயில் திருச்சுற்றில் நம்பேரால் வைத்த

3. அகரம் கோயில் பொன்மேந்த பாண்டியச் சதுர்வேதி மங்கலத்து அகரப்பட்டாருள் பேர் ஐம்பத்துநால்வர்க்கு பேர் ஒன்று

4. க்கு நிலம் அரைவேலியாக நிலம் இருபத்தேழுவேலியும் நாயனார்கோயில் பொன்மேந்த பெருமாளுக்கு நால்

5. வேலியும் ஆக நிலம் முப்பத்தொருவேலிக்கு இந்நாட்டுத் திறப்பான ஊர்கல்லை நாட்டவர் உள்வரிப்படி.

---

சில குறிப்புக்கள்:—

கோனேரின்மை:—பிற்காலத்துச் சோழமன்னர்கள் தரித்துவந்த பட்டப் பெயர்களுள் ஒன்றாகும். திருப்பழனம், திருஇடைக் குளம், (மருத்துவக்குடி), காஞ்சீபுரம்: இவ்வூர்க் கல்வெட்டுக்களைக் காண்க. இஃதேபோன்று, அரியலூர்ச்சமீன் மழவர்குடியினர் தரித்துவரும் விசய ஒப்பில்லாத என்ற பட்டப்பெயரும் இக்கருத்துடையதாகும்.

கஞ்சானகரம்:— இப்பெயருடைய ஊர் ஒன்று தருமபுரத்துக்கு வடகிழக்கே, காவிரியின் வடகரையில் இருப்பதை அறிந்தேன். இதன் திருத்தமானபெயர் கஞ்சாறநகரமாதல்வேண்டும். (முதலாம் இராசராசமன்னனது கல்வெட்டில் 'இந்தளூர் நாட்டுக் கஞ்சாறநகர ஊரார்'—என்ற தொடர் வந்திருப்பதைக் காண்க) இவ்வூரை மானக்கஞ்சாறநாயனார் திருப்பதி என்று கொள்வதற்கு ஆதாரம் உண்டா என்பதை ஆராயுமாறு ஆராய்ச்சியாளரை வேண்டுகின்றேன்.

உள்வரிப்படி:—மானியமாக அநுபவித்துக்கொள்வதென்று அரசாங்க வரிப் புத்தகத்திற் பதிவுசெய்யப்பட்டபடி.

---

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதந்தோறும்வெளிவரும்

## ஒரு தமிழ்ப்பத்திரிகை.

முப்பத்தெட்டாந்தொகுதி.

**Volume 38.**




விக்கிரம—விஷு ௵

1940—1941.

பத்திராசிரியர்—திரு. நாராயணையங்கார்.

மதுரைத்தமிழ்ச்சங்கமுத்திராசாலை,

மதுரை.

# முப்பத்தெட்டாந் தொகுதியுள்ளுறை.

---

## அநுபந்தம்.

### விஷயம்.



---

### நூல்.

[முற்றுப்பெறாதவை.]

# பொருளுரை வழங்கியோர் பெயரும் பொருளுரைகளின் பெயரும் பக்கமும்

ஸ்ரீ. சி. கணேசையரவர்கள், (ஆசிரியர், ஸம்ஸ்க்ருதவித்தியாசாலை, சுன்னாகம், யாழ்ப்பாணம்.)



ஸ்ரீ. வை. சுந்தரேசவாண்டையாரவர்கள், (ஆசிரியர், திருவையாறு.)



ஸ்ரீ. G. சுப்பிரமணியபிள்ளையவர்கள், M.A., B.L., (சென்னை.)



ஸ்ரீ. ராவ்ஸாஹிப். வெ. ப. சுப்பிரமணியமுதலியாரவர்கள், G.B.V.C. (வெள்ளகால் போஸ்டு, பாவூர்ச்சத்திரம்வழி, S. I. Ry., திருநெல்வேலி ஜில்லா.)



திரு. நாராயணையங்கார், (பத்திராசிரியர், செந்தமிழ்.)



ஸ்ரீ. S. S. பாரதியாரவர்கள், M.A., B.L., (மலையகம், பசுமலை.)

ஸ்ரீ. V. S. ராமஸ்வாமிசாஸ்திரியாரவர்கள், B.A., B.L, (மதுரை.)

| | |
|---|---|
| ஸரஸ்வதீகண்டாபரணம் (கலைமகள்கழுத்தணி) | ௧௬௩, ௨௨௫, ௩௮௯, ௪௩௩, ௪௬௯. |

ஸ்ரீ. சுவாமி விபுலாநந்தரவர்கள், (பிரபுத்தபாரத பத்திராசிரியர், அத்வைதாசிரமம், Mayavati Post, (Via) Lohaghat, Almora Dt., U.P., Himalayas.)

| | | | |
|---|---|---|---|
| ஐயமும் அழகும் | ... | ... | ௨௯ |
| வண்ணமும் வடிவும் | ... | ... | ௪௯ |
| நிலவும் பொழிலும் | ... | ... | ௧௧௩ |
| மலையும் கடலும் | ... | ... | ௧௬௯ |
| கவியும் சால்பும் | ... | ... | ௧௭௭ |
| நாடும் நகரும் | ... | ... | ௧௯௩ |
| சங்கீதமகரந்தம் | ... | ... | ௩௩௭ |
| இசைக்கிரமம் | ... | ... | ௪௦௧ |
| எண்ணலளவை | ... | ... | ௪௭௩ |

ஸ்ரீ. ராவ்ஸாஹிப். S. வையாபுரிப்பிள்ளையவர்கள், B.A., B.L., (சென்னைப் பல்கலைக்கழகத்துத் தமிழாராய்ச்சித்துறைத்தலைவர், No. 33, சித்திரக்குளம் கீழண்டைத்தெரு, மயிலாப்பூர், சென்னை.)

| | |
|---|---|
| திருமுருகாற்றுப்படை உரையாசிரியருரை | ... பகுதி—௧, ௨, ௪. |

ஸ்ரீ. ச. ஸ்ரீநிவாஸையங்காரவர்கள், B.A., (தமிழ்விரிவுரையாளர், லயோலாகாலேஜ், No. 133, பெரியதெரு, திருவல்லிக்கேணி, சென்னை.)

| | | | |
|---|---|---|---|
| திருநாங்கூர் | ... | ... | ௧௪௫ |

---

## II. செந்தமிழ்ப்பிரசுரம்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1 | ஐந்திணையைம்பது (உரையுடன்) | 0 | 4 | 0 |
| 2. | கஞநூல் (5) இனியதுநாற்பது (உரையுடன்) | 0 | 3 | 0 |
| 3. | *வளையாபதிச்செய்யுட்கள் | | | |
| 4. | புலவராற்றுப்படை | 0 | 3 | 0 |
| 6. | *நேமிநாதம் (உரையுடன்) | | | |
| 7. | திருநூற்றந்தாதி (உரையுடன்) | 0 | 6 | 0 |
| 8. | திணைமாலைநூற்றைம்பது (உரையுடன்) | 0 | 8 | 0 |
| 9. | அநுமானவிளக்கம் | 0 | 10 | 0 |
| 10. | அட்டாங்கயோகக்குறள் | 0 | 2 | 0 |
| 11. | *விவசாயரசாயன சாஸ்திரச்சுருக்கம் | | | |
| 12. | *பன்னிருபாட்டியல் | | | |
| 13. | நான்மணிக்கடிகை (பழைய உரை) | 0 | 4 | 0 |
| 14. | முத்தொள்ளாயிரச்செய்யுட்கள் | 0 | 3 | 0 |
| 15. | திருச்செந்திற்கலம்பகம் | 0 | 3 | 0 |
| 16. | திருவாரூருலா | 0 | 8 | 0 |
| 17. | சுகசந்தர்சனதீபிகை | 0 | 12 | 0 |
| 18. | இயற்கைப்பொருட்பாடம் | 0 | 4 | 0 |
| 19. | தேவையுலா | 0 | 3 | 0 |
| 20. | நரிவிருத்தம் | 0 | 2 | 0 |
| 21. | சிதம்பரப்பாட்டியல் (உரையுடன்) | 0 | 8 | 0 |
| 22. | *திருக்கலம்பகம் (ஷை) | | | |
| 23. | *விக்கிரமசோழனுலா | | | |
| 24. | குருமொழிவினாவிடை | 0 | 1 | 0 |
| 25. | கேசவப்பெருமாள் இரட்டைமணிமாலை | 0 | 2 | 0 |
| 26. | திருத்தணிகைத்திருவிருத்தம் | 0 | 1 | 0 |
| 27. | மதுரைத்திருப்பணிமாலை | 0 | 8 | 0 |
| 28. | *சந்திராலோகம் | | | |
| 29. | *சோழவம்சசரித்திரச்சுருக்கம் | | | |
| 30. | ஞானாமிர்தக்கட்டளை | 0 | 3 | 0 |
| 31. | பாண்டியம் | 0 | 4 | 0 |
| 32. | மநீஷாபஞ்சகம் | 0 | 8 | 0 |
| 33. | வேளிர்வரலாறு | 0 | 8 | 0 |
| 34. | *அகப்பொருள்விளக்கம் | | | |
| 35. | *திருமந்திர நூறுபாட்டுக்குரை | | | |
| 36. | உவமானசங்கிரகம் | 0 | 1 | 0 |
| 37. | மாறனலங்காரம் மூலமும் உரையும் | 4 | 8 | 0 |
| 38. | திருப்புல்லாணிமாலை | 0 | 2 | 0 |
| 39. | *பழமொழி மூலமும் பழையஉரையும் (முதல் 100 செய்) | | | |
| 40. | திருமாலிருஞ்சோலைமலை அழகர்பிள்ளைத்தமிழ் | 0 | 8 | 0 |
| 41. | பொருட்டொகைநிகண்டு | 0 | 6 | 0 |
| 42. | அகராதிநிகண்டு | 0 | 12 | 0 |

| | | | | |
|---|---|---|---|---|
| 43. | மேகவிடுதூது ... ... ... | 0 | 2 | 0 |
| 44. | திருக்குற்றாலமாலை ... ... ... | 0 | 2 | 0 |
| 45. | தண்டலையார்சதகம் ... ... ... | 0 | 4 | 0 |
| 46. | இராமோதந்தம் ... ... ... | 0 | 3 | 0 |
| 47. | பழமொழிமூலமும் பழைய உரையும் (2-வது 100செய்) | 1 | 0 | 0 |
| 48. | சேதுநாடும் தமிழும் ... ... ... | 0 | 6 | 0 |
| 49. | *கடைவள்ளலார்காலம் ... ... ... | | | |
| 50. | தமிழரும் ஆந்திரரும் ... ... ... | 0 | 4 | 0 |
| 51. | *மதங்கசூளாமணி ... ... ... | | | |
| 52. | கூடற்புராணம் ... ... ... | 0 | 10 | 0 |
| 53. | திருவள்ளுவர் (தமிழ்) ... ... ... | 0 | 6 | 0 |
| | ஷை (ஆங்கிலம்) ... ... ... | 0 | 6 | 0 |
| 54. | அரும்பொருள்விளக்கநிகண்டு ... | 1 | 4 | 0 |
| 55. | மாறனகப்பொருளும் திருப்பதிக்கோவையும் ... | 0 | 12 | 0 |
| 56. | பாப்பாவினம் ... ... ... | 0 | 10 | 0 |
| 57. | மதுரைமும்மணிக்கோவை ... ... ... | 0 | 5 | 0 |
| 58. | பழனிப் பிள்ளைத்தமிழ் ... ... ... | 0 | 3 | 0 |
| 59. | கடம்பர்கோயில் உலா ... ... ... | 0 | 6 | 0 |
| 60. | சங்கரநயினார்கோயில் அந்தாதி ... ... | 0 | 6 | 0 |
| 61. | கலைசைக்கோவை ... ... ... | 0 | 12 | 0 |
| 62. | பெருந்தொகை ... ... ... | 5 | 0 | 0 |
| 63. | சூடிக்கொடுத்தநாய்ச்சியார்தோத்திரப்பாமாலை ... | 0 | 5 | 0 |
| 64. | சிராமலைக்கோவை ... ... ... | 0 | 12 | 0 |
| 65. | மத்யமவியாயோகம் ... ... ... | 0 | 2 | 0 |
| 66. | சந்திரகுப்தன் ... ... ... | 0 | 6 | 0 |
| 67. | அமிர்தாஞ்ஜலி ... ... ... | 0 | 2 | 0 |

* இவ்வடையாளமிடப்பட்டவை இப்போது கைவசமில்லை.

குறிப்பு:-1. சங்கத்தினின்று மாதமொருமுறை அரிய பெரிய விஷயங்களைக்கொண்டுவெளியாகிவரும் இச்" செந்தமிழ் "ப்பத்திரிகைக்கு வருஷச்சந்தா ரூ. 4. தனிப்பிரதியின் கிரயம் அணா 8. வெளிநாடுகளுக்கு வருஷச்சந்தா ரூ 4—8—0. இதுவரை 38 தொகுதிகள் பூர்த்தியாயிருக்கின்றன. இவற்றுள் 1, 2, 3, 7, 8, 9, 10, 16-ம் தொகுதிகள் கைவசமில்லை. பைண்டு செய்யப்பெறாததொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ 4—0—0-வீதமும், பைண்டு செய்யப்பெற்ற தொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ 4—12—0 வீதமும் விற்கப்பெறும். வி. பி. சார்ஜ் பிரத்தியேகம்.

2. சங்கப்பிரசுரம், செந்தமிழ்ப்பிரசுரம், செந்தமிழ் முழுத்தொகுதி—இவற்றுள் ஒவ்வொருபுத்தகத்திலும் ஒரேதடவையில் 10 பிரதிகளும் அதற்கு மேற்பட்டும் வாங்குவோர்கட்கு மொத்தக்கிரயத்தொகையில் 100க்கு 10 வீதம் கமிஷன் தள்ளிக்கொடுக்கப்படும்.

3. சங்கப்பதிப்புப்புத்தகங்களை, ஒரு ரூபாய்க்கும் அதற்கு மேற்பட்டும் வாங்குவோர்கட்கு, ரூபா ஒன்றுக்கு அரை அணா வீதம் கமிஷன் தள்ளிக்கொடுக்கப்படும்.

லக்ஷ்மீநாராயணையர், மானேஜர்.